உ

முருகக்கடவுள் துணை.

ஸ்ரீகயிலாசவர்க்கத்துள் மஹாமஹிமைபொருந்திய

நந்தீசுரமகாமுநிவர்

அருளிச்செய்த

# கருக்கிடை-௱.




இஃது

திருமயிலை

## வைதிலிங்கதேசிகரால்

பார்வையிடப்பட்டு.

பைய்ர்நத்தம்,

## லிங்கப்பசெட்டியாரால்

சென்னை,

சகலகலாநிலைய அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1888.

# விளம்பரம்.

இதனால் யாவருக்குமறிவிப்பது யாதெனில்:— இப்புத்தகமும் இன்னும் தமிழ் - தெலுங்கு - கிரந்தம்-இவற்றிலுள்ள பலவிதப் புத்தகங்களும் வேண்டுபவர்கள், சென்னபட்டணம் பெத்துநாயகன் பேட்டை பாப்ம்ஸ் பிராட்வே (154 - 155) வது நெம்பர்களுள்ள வீட்டிலிருக்கும் தஞ்சாவூர் - சின்னகன்னையசெட்டியாரிடம் விலைக்குப்பெற்றுக் கொள்ளலாம் பெற்றுக்கொள்பவர்கள் கடிதமெழுதி பதில்தெரிந்துகொள்ளவேண்டில்,மேற்படியாருக்குப் போஸ்ட்லேபில்வைத்தனுப்பினாலன்றிப் பதிலுத்தரம் கிடையாது. புத்தகங்களுக்குப் பணமனுப்பும்பக்ஷத்தில், மணியார்டராகவாவது போஸ்டு லேபிலாகவாவது அனுப்பல்வேண்டும் போஸ்ட் லேபிலாக வனுப்பினால் ரூபா - க - க்கு, வட்டம் அணா-க-சேர்த்தனுப்பல் வேண்டும்.



உ

முருகக்கடவுள் துணை.

நந்தீசுரர் அருளிச்செய்த

# கருக்கிடை-நூ.

காப்பு.

மூலம்என்றகணபதியின் பாதம்போற்றி
முத்திபெற்றசுழிமுனையின் முனைமேல்நின்று
கோலம்என்றகுண்டலிக்குள் குகைதான்உண்டு
குகைதனிலேகுருபரனும் அம்மைவாழ்வார்
சீலம்என்றதவமகிமை பெற்றசித்தர்
தேடியதோர்வீடதனைத் தெளிந்துபார்த்து
ஆலம்என்றகொடிமரத்தின் கீழேநந்தி
அமர்ந்துநின்றபீடம்என்ற ஆதிகாப்பே. (க)

ஆதிஎன்றநால்வேதம் ஆறுசாஸ்திரம்
அடங்கிநின்றஅரனுடைய பாதம்போற்றி
நீதிஎன்றநெறிதவருப் பொதிகைவாழும்
நிரஞ்சனமாய்நிறைந்தகும்ப முநித்தாள்போற்றி
சோதிஎன்றவடிவான ரிஷிகள்சித்தர்
துணைஎனவேஎன்மனதில் துதித்துக்கொண்டு
ஆதிஎன்றரவிமதியும் சுழினைமூன்றும்
ஆகிநின்றசிவன்உமையாள் ஆதிகாப்பே. (உ)

ஆதிஎன்றபூரணமே சோதிகாப்பு
அண்டபகிரண்டம்எல்லாம் ஆள்வோன்காப்பு
நீதிஎன்றமவுநாதி முநிவர்பாதம்
நீங்காமல்அநுதினமும் நெஞ்சுள்வைத்து
சோதிஎன்றசுடரொளியைக் கண்டுதேறிச்
சுத்தபரிபூரணமாய் மவுநம்பூண்டு
வாதிஎன்றபெரியோர்கள் மனதுதேற
வசனித்தேன்முந்நூறு வகைபாம்காப்பே. (ங)

சித்தர்நூற்களில் பெரும்பாலும் மோனைத்தொடை எதுகைத் தொடைகளை அருள்வழிப்பட்டோராகிய அவர்களால் செய்யப்பெற்ற சொற்சாரியைகளாகப் பயன்கொள்ளப்படும்.

காப்பானஐங்கரனைப் பணிந்துக்கொண்டு
கந்தன்வடிவேல்முருகன் கடாட்சத்தாலே

ஏற்பானரிஷிமுனிவர் சித்தர்பாடல்
எல்லோரும்பாடியதோர் தமிழுக்கெல்லாம்
காப்பானநிறவுகோல் இம்மூந்நூறும்
சாற்றினேன்புவிதனிலே மனிதர்க்காகக்
கோப்பானகருக்குருவாம் வழியில்காணக்
கோர்வைகொண்டமணிபோலே வகையாய்த்தானே. (௪)

நூல்.

வகையானசாஸ்திரங்கள் அநந்தமுண்டு
வகைஅறியார்கரு அறியார் மடையர்மெத்த
துகையானசாஸ்திரத்தைப் பாடம்பண்ணிச்
சொல்லுவார்பொருள் அறிய மாட்டார்ஐயோ
வகையானமாய்கைதனில் விழுந்தழிந்து
மதிமயங்கிநிலை தவறி மதமேபூண்டு
தகையானகதைபோல முடிவதல்லால்
சாஸ்திரத்தின்மறைப்பறியார் கூறினேனே. (௫)

கூறினேன்சாஸ்திரத்தில் மறைத்ததெல்லாம்
கூறினதால்வெகுகோடி தபசிருந்து
மீறினார்அவருடைய பதம்இரண்டும்
மிகவணக்கம்செய்துகொண்டு நூலைவாங்கித்
தேறினார்தவமுனிவர் மகிமைபெற்றுச்
சித்தில்இருந்தார்பெரியோர் சிவமேஎன்று
ஆறினார்என்னுடைய நூலைப்பார்த்து
ஆதிசிவன்நந்திவாஎன் றழைத்திட்டாரே. (௬)

சிவனுக்கும்நந்தீசுரருக்கும்தர்க்கம்.

அழைத்துமேஅருகிருத்தி அமிர்தம்ஊட்டி
அன்புடனேகருக்குருவை வெளியாய்ச்சொல்லத்
தழைத்துமேவாய்க்கொழுப்போ என்றுகேட்டார்
சமரசமாய்வாய்கரத்தால் பொத்திக்கொண்டு
இளைத்துமேகருக்குருவும் வெளிதோன்றாமல்
எல்லோரும்சொல்லிவைத்த நூல்கள்தோறும்
மலைத்துமேபோவதல்லால் வழிகாணாது
மகத்தானமுனிவர்கட்கேன் மறைப்பென்றேனே. (௭)

மறைத்ததனால்இவர்களுக்குப் பாவம்உண்டு
வழிகாணாதலைந்தழிந்தோர் அநந்தகோடி
இறைத்ததனால்ஏதுபலன் கண்டால்அன்றோ
ஏறவிட்டேணிதனைத் தாழ்த்துவார்போல்
உரைத்தபொருள்தெரியாமல் அலைந்தார்ஐயோ
உண்டென்றுநம்பிநம்பி உலகில்தானே
படைத்தமனுக்கெட்டலைந்த பாபம்எல்லாம்
பழிவரும்என்றெண்ணியல்லோ உரைசெய்தேனே. (௮)

சித்தர்கட்கும் நந்தீசுரருக்கும்தர்க்கம்.

உரைசெய்வேன்தவமுனிவர் ஒளிப்பையெல்லாம்
உத்தமனேஅவர்பூட்டைத் திறப்பார்உண்டோ
மறைசெய்தப்பொருளையெல்லாம் வெளியாய்ச்சொன்னேன்
மகத்தானசித்தர்களும் கோபங்கொண்டு
நிறைசெய்தேனந்தனுடன் வாதுபேசி
நிராகரிப்பாய்வாதாடிச் சண்டைசெய்தார்
பரைசெய்தசிவனும்என்மேல் கோபங்கொண்டார்
பாயஎன்றுரிஷபமாய்ப் பதுங்கினேனே. (௯)

பதுங்கினேன் ஆதிசிவன் என்னைப்பார்த்து
பதஞ்சலியாய்நிரஞ்சனமாய்ப் பாதம்தூக்க
ஒதுங்கினேன்தயவுஅவர் என்மேல்வந்து
ஓகோகோநந்திவா என்றுசொன்னார்
‡ இதங்கினார்அவர்முன்பு மண்டிபோட்டு
இருந்தனடாஎனக்கொருவர் எதிரோஇல்லை
சதங்கியேவளையில்உள்ள சாரைப்பாம்பைச்
சாதகமாய்நாட்பழக்கம் தான்செய்வாயே. (௰)

சிங்குவைசாதகம்.

செய்துகொண்டுவருகையிலே கரிசாலைநெய்யும்
சேரஒன்றாய்க்கலந்துகொண்டு கபத்தைப்போக்கு
நைதுகொண்டுகபக்கட்டு போகும்போது
நன்றாகவளையின்உள்ளே சாரைப்பாம்பை
நெய்துகொண்டுதர்ஜநி மத்யமையினாலே
நினைவாகஓட்டுகிற மதியைவாங்கிக்
கொய்துகொண்டஅம்மதியை ரவியில்சேர்த்தால்
குறுகுமடாபாம்புநின் றாடாதுபாரே. (௰௧)

இரவிமதி அங்கிதாரணை.

பாரோநீரவிதனிலே நிற்கவேண்டும்
பரம்பொருளைச்சுழிமுனைவெளி காணவேண்டும்
சேரோநீமதியமிர்தம் கொள்ளவேண்டும்
சிவசிவாவாசிநிலை அறியவேண்டும்
கூடோநீவளையின்உள்ளே சாரைப்பாம்பைக்
கொண்டுசெல்லஅமிர்தம் அங்கேஇறங்கும்பாரு
காரோநீஅசுக்கசடு அகன்றுபோகும்
கண்மணியேஎன்மகனே கண்டுகொள்ளே. (௰௨)

அமிர்ததாரணை.

கொள்ளுவதுவாசிஅங்கே செல்லும்போது
குணமானஅமிர்தவழி கண்டவாசி

---

‡ இதங்கினார்மரூஉமொழி, சித்தபுருஷாள், தேசபாஷையென்ப தேசியம் எனினும் அது.

விள்ளுவதுஒருபோதும் இல்லைஇல்லை
மிஞ்சாதுஅரவம்அது படுக்கும்வீடு
தள்ளுவதுபாசவினை இருக்கும்ஆகில்
தன்மனதுஒருமைகொண்டு நில்லாதப்பா
தெள்ளுவதுசுழிமுனையில் தீபம்கண்டால்
திடமாகக்கற்பம் அறிந்துண்ணுவாயே. (௰௩)

வாசிலயம் வாய்வுலயம்எனினும்அது.

உண்ணுவதுமதிதேய்ந்து ரவியில்சேர்ந்தால்
உன்தேகம் அழிவதில்லை பிரகாசிக்கும்
எண்ணுவதுசந்திரன்என்ற மூச்சைவாங்கித்
தான்கொள்வாய்இரண்டொன்று தப்பாமல்தான்
என்னுவதுமதிதேய்ந்து ரவியில்சேரும்
என்மகனேசூரியனில் நில்லுநில்லு
பண்ணுவதுசூரியனில் நிற்கும்போது
பார்க்கலாம்சுழிமுனையில் தீபம்தானே. (௰௪)

காயசித்திமுதலியசித்திகள்-உரு-ம்-சித்திக்கும்என்கின்றது.

தி‡பமதுகண்டவுடன் தேகசித்தி
திரமானவாசிசித்தி யோகசித்தி
போகமதுஅமிர்தம்உண்ணக் கட்டுப்பாரு
பொல்லாதமாய்கைபது விலகிப்போகும்
தாகமது இல்லையடா பசியும்இல்லை
சர்ப்பினையாய்க்கொல்லுகின்ற பாசம்இல்லை
மோகமதுஒருபோதும் இல்லைஇல்லை
மோனம்என்றசத்தி அங்கேகாணலாமே. (௰௫)

காணலாம்ரிஷிமுநிவர் வார்த்தைசொல்வார்
கருக்குருவும்நன்றாகக் காண்பிப்பார்கள்
ஊணலாம்புவிதனிலே யுகாந்தகாலம்
உன்தேகம்எப்போதும் அழிவதில்லை
தோணலாம்பிறவிஎன்ற பாசம்போச்சுத்
துடங்கினதோர்தொழில்கள் எல்லாம்சித்திஆகும்
ஆணலாம்புவிதனிலே ஆசைதள்ளி
அகண்டபரிபூரணத்தில் அறிவாய்நில்லே. (௰௬)

சகலமும் மனோமாயம்என்கின்றது.

அறிவல்லோமனம்என்ற பேய்க்கூத்தெல்லாம்
அடித்தகற்றிஅறிவொன்றாய் திருத்திக்கொண்டு
தெரிவல்லோபிரபஞ்சமாயைதள்ளித்
தேரஎன்றால்வெகுநாள்தான் செல்லுமோசொல்

---

‡ பகரத்திற்குக்ககரம் இனவெதுகையாகவந்தன.

முறிவல்லோபெண்டுபிள்ளை மாயைஎல்லாம்
முன்தேடும்பொருள்களிட ஆசை தள்ளி
நெறிவல்லோபுருவமையத் தொளியில்நின்று
நேசம்வைத்துமதிவாய்சி ரவியில்சேரே. (௰எ)

எல்லாம்தன்மயமாதல்.

சேரப்பாரவியில்நின்று ஒளியைப்பாரு
தீர்க்கமடாசுழிமுனையின் தீபம்போல
ஆரப்பாஉனக்கிடு சொல்லப்போறேன்
ஆநந்தம்ஆச்சரியம் நடனம்காணும்
தேரப்பாமனம்தேறித் தெளிவதானல்
ஜெகம்முழுதும்ஜெகஜ்ஜாலம் என்றுதள்ளு
பாரப்பாமதிதேய்ந்து ரவியில்சேர்ந்தால்
பரமகுருநீஆவாய் பாருபாரே. (௰அ)

முடிந்தமனோலயத்தில் சதாமுயற்சி.

வேறு.

பாரும்சுழிமுனை பகர்ந்தபருவத்தில்
தேரும்மனது தேராமல்ஓடும்
கூரும்குரங்கைக் குலையவிடாமல்
சீறும்அரவம் சேர்ப்பதுதிண்ணமே. (௰௯)

கற்பம் உண்கையின்பலன்.

திண்ணம்பிறக்கச் செப்பியகற்பம்
உண்ணப்பிறவி ஒழிந்திடும்பாரு
வண்ணமாம்மதியைவங் என்றுவாங்கிடு
அண்ணலேரவியில்அங் என்றுநின்றிடே. (௨௰)

கற்பம்உண்கையில் வாசிப்பழக்கம் விடப்படாதென்கின்றது.

நின்றிடக்கண்டு நிறுத்தியரவியும்
பொன்றிடமதியைப் போகவிடாமல்
கன்றிடச்சென்று கருதியேஊது
விண்டிடும்போது விடுகசிங்என்றே. (௨௧)

சிங்எனவிட்டதிடம் அதைக்கேளாய்
தங்கெனநின்று தவறுபடாமல்
பொங்கென்நின்று பொருந்திநிறுத்திடு
இங்கெனநின்று இருந்திடும்பாரே. (௨௨)

இருந்திடும்போது இருகண்ணும்மூடிப்
பொருந்திடும்மாய்கைப் பூட்டைஅடாதே
தெரிந்திடும்ஆசையைச் சிக்கெனத்தள்ளி
உறைந்திடும்அன்னம் ஒருபொழுதுண்டிடே. (௨௩)

கற்பம்உண்கையில் பத்தியம்.

உண்டிடும்அன்னம் ஒருபோதுகொள்ளு
சண்ணரிசிம்பாசிப் பயறுகூட்டிடு
எண்ணரிடும்ஆவின் நெய்யும்பால்கொள்ளு
உன்னிடமாக உறைகுவள் சத்தியே. (௨௪)

சத்திகிருபை தயவாய்இருந்திடும்
முத்தியும்உண்டு மோட்சமும்ஆகும்
நித்தியம்நடனம் நிரந்தரம்செய்யும்
புத்தியுள்ளோரைப் புனிதமாய்ச்சேர்த்திடே. (௨௫)

சற்சங்கம்வேண்டும் என்கின்றது.

சேர்த்திடவேண்டாம் திருடர்வஞ்சகரைப்
பார்த்திடவேண்டாம் பரமலோபியரை
ஏற்றிக்கழித்திடும் இடும்பர்கசடரை
சாற்றிப்பழிப்பவர் தமைத்தள்ளிநில்லே. (௨௬)

அபாத்தகர்க்குக்கருமானம்வெளிவிடில் சாபம்வரும்என்கின்றது.

வேறு.

தள்ளினதால்உனக்குவெகு புண்ணியம்உண்டு
சண்டாளாபொருள் அவர்க்கு விள்ளொண்ணாது
துள்ளிமனம்அறியாமல் பேசினக்கால்
துஞ்சியேஅவன்சிரசு வெடித்துப்போகும்
கொள்ளிஅவன்குலம்அற்று குடியும்அற்று
குரைக்கின்றநாயதுவாம் மிருகம்ஆகி
வெள்ளிஎன்றஇடிஇடித்துத் தலைமேல்விழும்
மேதினியில்அறியார்பால் பேசொண்ணாதே. (௨௭)

பக்குவம்உள்ள சிஷனைக்கண்டு உபதேசிக்கும்மார்க்கம்.

பேசினதால்வருவதென்ன பொருளைஎல்லாம்
பிதற்றினதால்பலித்திடுமோ பேயேசொல்லு
மாசிமறுஇல்லாத நிலைமைஉள்ள
மனதைநெடுநாள்பழக்கத் தாலேகண்டு
தேசிஎன்றத்திரைவழி நடத்தும்மார்க்கம்
செப்புவாயஞானம்என்ற போதம்தன்னை
வீசிவிளையாடுகின்ற காலம்பார்த்து
விளங்கவேரவிமதியின் விபரம்சொல்லே. (௨௮

உபதேசநிலை.

விபரம்என்னமதிதேயும் வழியும்சொல்லி
மெய்யானரவியினிடப் பலனும்சொல்லி
தபரம்என்றசுயஞ்சோதி நிலையும்சொல்லித்
தமர்வாசல்பூட்டுவிடும் திறவுசொல்லி

உபாயம்என்றகற்பம் உண்ணும்கருவும்சொல்லி
உத்தமனேமவுனமில்லை யென்றால்சொல்லி
செபாயம்என்றகமனமாக் குளிகைசொல்லி
செம்பிரஅண்டத்தின் குறிசொல்வாயே. (௨௯)

பக்குவாபக்குவர்களால்வருபயனை வற்புறுத்தல்.

குறிசொல்வாய்உன்மனது போலவின்றால்
கொட்டிவிடுஅவன்மனது நொந்தானால்
நெறிதவறிஉன்தபசுக் கிடறுண்டாகும்
நேர்மைஉள்ளபிள்ளைகளை அழைத்துச்சேரு
வரிதவறிநிலைகுலைந்து மயங்கும்பேரை
வஞ்சகரைச்சேராதே வகைசொல்லாதே
பரிதவறிப்பொருள்பறிக்கும் பாவிமாரைப்
பகைத்தாலும்உனக்கிடறும் பாருபாரே. (௩௰)

பாரானசாகரத்தில் வஞ்சம்மிச்சம்
பழிகொலைகட்கஞ்சாத பாவிமாரைச்
சேராதேஒருபோதும் சேர்ந்தால்மோசம்
சேர்ந்ததனால்உனக்கு வருமானம்என்ன
கோரானபொருள்கள்எல்லாம் அறிந்துக்கொண்டு
நெளிழவிட்டுப்பிறர்சிரிக்க நிசிதம்பண்ணிக்
கூரானஜடலம்அதற் கிடைஞ்சல்செய்துக்
கோள்சொல்லிக்கைப்பொருளைக் கொள்வார்பாரே. (௩௧)

பாரோநீஉலகினில் சத்தியமேஇல்லை
பதிவானநிஜம்இல்லை பொய்யைச்சொல்லி
வேறேநீவஞ்சகங்கள் அறியாமல்தான்
மெய்ஞ்ஞானபூரணத்தின் லகிரியாலே
கூறேநீசாஸ்திரத்தின் பொருளைஎல்லாம்
கொட்டினதால்சித்தரிடச் சாபம்எய்தும்
காரோநீஉன்ஜடலம் போல்தான்மக்காள்
கருதாதேபிரபஞ்ச மாயைத்தள்ளே. (௩௨)

தள்ளினால்யோகமுடன் ஞானம்சித்தி
தய்ங்காமல்தமர்வாசல் திறக்கும்சித்தி
அள்ளினால்அமிர்தமுடன் கற்பம்சித்தி
அருள்பெருகும்ஜோதிஎன்ற தீபம்சித்தி
தெள்ளினால்தொட்டதெல்லாம் சித்திஎன்று
சித்தர்களும்முனிவர்களும் மனதுகூர்வார்
விள்ளினால்சகலமுமே சித்திஆகும்
மெச்சுவார்தவம்அதனில் மிக்கோர்தானே. (௩௩)

## ஞானநெறி.

தானான ஞானத்தின் வழியைச்சொல்வேன்
தன்மையுடன்பெருமைதனைத் தள்ளவேண்டும்
தேனான வவ்வுயிர்க்கும் இரங்கவேண்டும்
தீவினைகள்வஞ்சகங்கள் செய்யக்கூடா
கோனான குருபதமே கெதியென்றெண்ணிக்
குறித்திடமேநிலையாகக் கூர்ந்துகொண்டு
வானான மதிதேயப் பழக்கம்பண்ணி
மக்களோரவியில்மனம் வைத்துநில்லே. (௩௪)

## மனோலயத்தின்பேறு.

### வேறு.

நின்றுமதியை நெருங்கிஇழுத்திடு
கண்டுரவியில் கலந்துஇருந்திடு
பண்டுமுனையில் பதியவைநேசம்
அண்டர்இருப்பிடம் அறியலாம்பாரோ. (௩௫)

அறியவெகுநாள் ஆளலாம்நெஞ்சம்
குறியேகெதியென் றெண்ணிஇருந்திடு
வெறியேபிடிக்கில் மெய்ஞ்ஞானபோதம்
சரியாகநின்று தழைக்காதுபாரோ. (௩௬)

பாரேசுழிமுனைப் பகரார்கள்நல்லோர்
வாரேமுடியில் ரவிமதிஉண்டிடில்
காரோரவியில் கனக்கூடுகொண்டு
வேறேஅமிர்தம் விழும்அதுபாரோ. (௩௭)

விழுகுமேரவிஜாலம் மெய்ஞ்ஞானபோதம்
குழகுமேமதிஜாலம் குடிகெடும்நஞ்சு
பழகும்அதனால் மதிதேயக்காட்டில்
விழுகும்மதியில் மேல்என்றார்நல்லோர். (௩௮)

நல்லோர்கள்சொன்ன ஞாயம்அறிந்திடு
விள்ளார்ரவியை மேவுவாய்வள்ளன
அல்லார்மதியை அவ்வன்றடைந்திடு
நில்லாதுநின்று நிறுவிக்குப்பாரோ. (௩௯)

நிறுவிக்கும்போது நிருவிகற்பம்ஆச்சு
பறிவிக்கும்போது பாச்சலாம்சொர்ப்பம்
அறிவிக்கும்அந்த அமிர்தம்அதாகும்
தெரிசிக்கச்சொன்ன தெளிந்தஜெயநீரோ. (௪௰)

† சந்திரகலசாமிர்தத்தின்நாமமும்மேற்படி அமிர்ததாரணையின் பயனும் திருவுளம்பற்றுகின்றார்.

நீரானஅண்டம் நிலைத்தகொடிமுடி
வாரானமேருவில் வஸ்துநான்குண்டு
சாரானவஸ்துவைக்குச் சாற்றுவேன்நாமம்
பேரானரவியும் பெலமானகெங்கையே. (௪௧)

கெங்கையில் அக்கினி கிளைமூம்பிடில்
பங்கம்இல்லாமல் பற்றும்பிறையது
அங்கமும்வியர்வை அழுந்திக்கசிந்திடும்
பொங்கமும்பொங்கிப் பொழிந்திடும்பாரே. (௪௨)

பொழிந்தஅமிர்தம் பொங்கியேநின்று
வழிந்தேதமுழுங்க வழியைஎன்சொல்வேன்
தெளிந்தமனிதர் நிலையார்கள்போதம்
களிந்தேஇறந்து தான்மாளுவாரோ. (௪௩)

வாசிநிலை.

வாராமல்மதியை ரவிதன்னில்சேர்த்திடு
தேராதசுழியில் மனதைநிறுத்திடு
வாரானகெர்ப்பம் மாயையைத்தள்ளிடும்
நிருனபோதம் நிலைக்கும்உறுதியே. (௪௪)

† சந்திரகலசாமிர்தம்-சந்திரபுஷ்கரணிஎனினும், அதுசந்திரபானம்என்றும்சிலர்.

உறுதிஎன்றெண்ணி ஒருமனம்கொண்டு
கருதியேஅக்கினி கைவசம்ஆனால்
திருவிக்கும்கெர்ப்பம் நிலைக்கும்ஜலத்தில்
பருதியைக்கண்ட பனிபோல்விலகுமே. (௪௫)

விலகுமேசந்திரன் இடப்பக்கநிலையில்
குலவுமேதுஞ்சி இருக்குமேஆகில்
அலகுமேவிந்து அகாரத்தின்வீட்டில்
பழகுமேவியர்வை ஊசிநீர்ஆகுமே. (௪௬)

ஊசிச்சுழிமுனை உச்சியின்மீதில்
நாசியின்மேலேநான் கங்குலத்தில்
வாசியின்விடுவரபதிஆனது
பேசியபெயர்தான் பிறங்கும்முக்கோணமே. (௪௭)

முக்கோணம்விட்டு முழங்கிடும்அண்டத்தில்
சிக்கெனக்கூட்டித் திடப்படும்போது
அக்கெனவீட்டில் அமரும்சுழிமுனை
நக்கனும்ஆயி நன்றாய்அறைந்ததே. (௪௮)

அறைந்தனை நந்துபூதம் ஆடாமல்கட்டினால்
பிறந்ததோர்வாசி பிக்கென்றுநின்றிடும்
பறந்தப்போகப் பாயாதுமாயை
இறந்திடும்மென்று என்னாதேசொன்னேன். (௪௯)

சொல்லுவேன்சூட்சம் தூலமிருந்திடு
மல்லுவேன்வங்கென்று வாங்கிநெருக்கிடு
நில்லுவேன் அங்கென்று நிறுத்தி அழித்திடு
வெல்லுவேனென்ற சிங்கென்றுவிட்டிடே. (௫௰)

விசியவாசியை விடாமலேகட்டி
தாசிஓடாமல் துவளாநிறுத்திடு
மாசியாவியில் மதியைநிறுத்திடு
பேசியநிலையைப் பேசிடுவோமே. (௫௧)

பேசிடும்அண்டம் வலப்புறம்சூரியன்
தேசியின்நிலையைச் செப்பலென்றது
கூசியசந்திரன் இடப்பக்கம்அப்பா
வாசிதான்நின்று வளர்ந்திடும்பாரே. (௫௨)

வளர்ந்தமுடியை வகுத்தார்கள்நல்லோர்
இளைந்தமதியால் இறந்திடவேண்டாம்
கலந்தபொறியைக் கசடறத்தள்ளி
நிலைந்தநிருமலம் நிற்பதுபெற்றே. (௫௩)

நிற்பதுநிற்க நிலைதவறாமல்
சொற்பவாழ்வு துவண்டலையாதே
அற்புதம்ஆன ஆனந்தபோதம்
கற்பனாகக் கண்டுகொள்வாயே. (௫௪)

காயாதிகற்பம்.

வேறு.

கொள்வதுதான்எளிதல்ல வெகுநாள்செல்லும்
குரங்கதனைக்கொம்பு தனில்பாயாமல்தான்
நல்லுவதுமனத்திறமைக் கொண்டால்அல்லோ
நாடாதஞானநிலை வெளுத்துப்போச்சு
துள்ளாமல்மனம்அடங்கிச் சோதிகொண்டால்
துலங்குமடாஉன்தேகம் காந்திஆகும்
விள்ளாமல்கற்பம்அதைப் பின்னேகொள்ளு
விளங்குமடாஉன்தேகம் விழுகாதுபாரே. (௫௫)

விழுகாதுகற்பம்அறிந் துண்ணவேண்டும்
வேதாந்தசாஸ்திரத்தை விரும்பவேண்டும்
நழுகாதமாயைவிட்டு நழுகவேண்டும்
நமனென்றதிவினைக்குள் அகப்படாதே

ஒருகாதுஞானநிலை அறிந்தபின்பு
உத்தமனேகற்பம் அறிந்துண்ணு உண்ணு
மருவானசிற்றண்டம் கொண்டுவந்து
மக்களேசூரியனை எடுத்துக்கொள்ளே. (௩௬)

இரவிமெழுகு.

சூரியனைத்தானெடுத்துப் பீங்கான்தன்னில்
சூரியன்முன்வைத்திடுவாய் நவநாள்தானும்
வீரியமும்தானொடுங்கி மெழுகுஆகும்
வெண்கருவைக்கூடவிட்டுக் கிண்டிப்போது
ஆரியராம்மும்மூர்த்தித் தயிலம்விட்டு
அப்பனேரவிமுகத்தில் வைத்துப்பாரு
சோதிதரும்மூன்றும்ஒன்றாய் மெழுகாய்ப்போகும்
சொல்லவொண்ணாமெழுகெடுத்துப் பதனம்பண்ணே. (௩௭)

பதனம்வெகுபதனம்அதாய்ப் பதனம்பண்ணிப்
பாலகனேதெளிமுன்பு வைத்துப்போற்றி
விதனம்என்றவிதனம்எல்லாம் தீர்ந்துபோகும்
மேன்மைஉள்ளஜடலம்அது வலுத்துப்போகும்
மதனம்என்றமன்மதன்போல் ஒளியும்காணும்
மக்களேபரவெளியுள் அடங்கிப்போகும்
அதனம்அதாய்க்கூத்து விளையாடல்ஆகும்
அப்பனேகாயாதி கற்பம்ஆச்சே. (௩௮)

ஆச்சப்பாமெழுகெடுத்துச் சூரியனில்கொள்ள
அடங்காதசந்திரன்தான் அடங்கிப்போகும்
வாச்சப்பாமெழுகுஒரு மண்டலம்தான்கொள்ளு
மக்களேமண்டலம்தான் நிறுத்திவைப்பாய்
போச்சப்பாஅவமிருத்து தொலைந்துபோச்சு
பொல்லாதசெந்தீயில் பொசிங்கிப்போச்சு
நீச்சப்பாநிலையாது மாயைவாழ்க்கை
நிருவிகற்பம்உண்டதனால் நிலைக்கும்பாரே. (௩௯)

நிலையானசிற்றண்டம் வெளிவிடாதே
நிஜமானமும்மூர்த்திக் கருச்சொல்லாதே
கலையானவெண்கருவைக் காட்டொண்ணாது
காட்டினால்உந்தனிடக் கபாலம்போகும்
வலையானமாயையிலே சிக்கிக்கொண்டு
மாண்டதனால்வருவதென்ன மைந்தாசொல்லு
சிலையானசிலையதுபோல் மவுனம்பூண்டு
ஜெகத்திலேதான்திரிந்து சிவத்தைப்போற்றே. (௪௰)

போற்றுவதுமெழுகுடனே நாதம்சேரு
போரும்நின்றமுப்பூரம் கூடச்சேரு

பார்த்திபனோநாதம்அதில் முப்புஇட்டு
பங்கயத்தோன்முகம்காணத் தெளிவுஆகும்
நாற்றிசையும்மெச்சுகின்ற மெழுகில்சேரு
நல்லதொருமெழுகினிட வலுமைமெத்த
காற்றினிடவாடைஅங்கே பட்டதானால்
கருக்குமடாமெழுகினிடக் காரம்போமே. (௬௧)

காரம்போம்மெழுகினிட வலுவேபோகும்
கசிவுகொண்டுமெழுகதுதான இலகாதையா
வீரம்போம்உட்கொண்டால் வலுச்செய்யாது
விந்தைஎன்றஜோதிமயம் தோன்றாதையா
சாரம்போம்வாசிஅது அடங்காதையா
தன்மையுடன்கைபாகம் தப்பிற்றானால்
ஆரம்என்றஅண்டத்தின் மெழுகுபோலே
ஆச்சரியம்ஒன்றும்இல்லை அதிதம்தானே. (௬௨)

அதிதம்என்றகுருவினில் வலுவோமெத்த
அம்மம்மாஅதன்பெருமைச் சொல்லொண்ணாது
பதிதம்என்றதொழில்கோடி தொந்தம்கோடி
பார்ப்பினால்வேதைஅது கண்கொள்ளாது
விதிதம்என்றஅஷ்டகர்ம்மம் கோடிக்குள்ஆகும்
விந்தைஎன்றதொழில்கோடி வினோதம்கோடி
வதிதம்என்றசந்திரனில் மெழுகுசொல்வேன்
மகத்தானபொருள்எனவே மனதில்கொள்ளே. (௬௩)

மதிமெழுகு.

கொள்ளடாசந்திரனை எடுத்துக்கொண்டு
கூர்மைஉள்ளசவ்வதனை உரித்துப்போட்டு
விள்ளடாமஞ்சள்என்ற கருவைக்கூட
விட்டுமேரவிதனிலேநவநாள்வைத்து
சொல்லடாகொடிநஞ்சு மாவைச்சேர்த்துச்
சுரோணிதமும்கூடவிட்டு முப்புபோட்டு
செல்லடாபரியினிடக் குச்சுகொண்டு
சேரநன்றாய்த்தான்கிண்ட மெழுகும்ஆமே. (௬௪)

வேறு.

மெழுகதுபோல விசைஒன்றும்இல்லை
நழுகாதுதேகம் நமன்அதற்கில்லை
சழுகாதுஉண்டால் ஜடலம்வலுத்திடும்
பழுக்காதுரோகம் நமன்பகைபோமே. (௬௫)

பகைபோகும்என்று பகர்ந்தார்கள்சித்தர்
பகைஅறிவார்க்கு மதுரம்ஆம்கற்பம்
தகைபோகும்என்று தான்மறைத்தார்கள்
துகையாம்கருவைச் சொல்லஒண்ணாதே. (௬௬)

சொன்னால்தெரிந்திடும் சூக்ஷமான அண்டம்
என்னால்வெளியாய் எளியவர்க்கிரங்கி
முன்னால்முனிவர் புதைத்தகருவெல்லாம்
தன்னால்புலம்பச்சபையில் சொன்னேனே. (௬௭)

சொன்னேனேயானும் துறைஒளியாமல்
விண்டேனேஎன்று வேண்டியசித்தர்கள்
கண்டேனேஎன்று கருதினார்முனிவர்கள்
பண்டேனேஎன்று பலவிதம்சொன்னாரே. (௬௮)

சொன்னமொழியைத் துறைதப்பிச்செய்தால்
பண்ணும்தொழிலில் பலவிதம்காட்டும்
எண்ணும்மனதுக் கின்பம்கொடாது
முன்னேமொழிந்த முறைதவறாதே. (௬௯)

தவறாதேசொன்னேன் சவுங்கலேமூலம்
தவறாதேசிற்றண்டம் தான்அதுஆகும்
தவறாதேசித்தர் தமதொளிப்பெல்லாம்
தவறாமல்சொன்னேன் சத்தியம்தானே. (௭௰)

சத்தியம்என்றுதான் இருந்தோர்க்கு
முத்திஎன்கின்ற மோட்சமும்உண்டாம்
பத்தியாய்நின்று பார்க்கின்றபேர்க்கு
சித்தர்மொழிந்த திறைஎல்லாம்வெளியே. (௭௧)

வெளிஆகும்என்று விமலனார்சொன்னார்
பழியாகரோமன் பாடினான்சிங்கி
தெளியாமல்வங்கம்நெறி வெட்டைஆனால்
கழியாமல்வெளியும் கட்டுணைத்தாரோ. (௭௨)

மாரணக்கரு.

மறைத்தபொருளை வகைவிபரம்ஆக
நிறக்கவேசொல்லினன் நெறிதவறாமல்
குறிக்கும்குருஅது கோடிகவறுகும்
பறிக்கும்பொருள்தான் பசுமையும்ஆமே. (௭௩)

ஆகுமேசந்திரன் அண்டம்எடுத்து
ஏகுமேபீங்கானில் இட்டிடித்தண்ணீர்
வேகுமேபொங்கி மெழுகதுஆகும்
சாகுமேமாரணக் கருஅதுஆமே. (௭௪)

கருஅதுசொன்னேன் காரணக்குருவை
இரவதுபகலும் இருதயம்வைத்து
மறவதும்இல்லை மகத்தானபோவம்
திறமதுசொன்னேன் செந்தீமூலமே. (௭௫)

## வேறு.

மூலமென்ற சுத்தரவி வெளியும்ஆச்சு
மூன்றோர்கள்சொல்லுவதைக் கேட்டிலாயோ
ஆலமென்றபேரண்டம் தன்னிலேதான்
அப்பனேரவிமதியும் அங்கேகண்டு
ஞாலமென்றஉந்திதனில் ரவிமதியுங்கண்டு
கண்டாளா அண்டபிண்டம் ரவிமதியும்ஆகும்
கோலமென்றாதாரக்குகளும் ரவிமதியும்ஆகும்
கூர்மையுள்ளஉப்பருவும் ரவிமதியும்ஆமே. (௭௬)

## அகாரஉகாரதீட்சை.

ஆருமேசித்தர்கள்தான் மறைத்தபொருள்எல்லாம்
அப்பனேவெளிதோன்றச் சொன்னேன்யானும்
பெருமேஅகாரமென்ற கருவையெல்லாம்
என்மகனேசொல்லுகிறேன் நன்றாய்த்தானும்
போதமேசிவிதீர் அகாரம்ஆகும்
புண்ணியனேவிந்துஅல்லோ அகாரம்ஆகும்
வாருமேகுடத்துநீர் அகாரம்ஆகும்
மக்களேஅகாரம்அது அமிர்தம்ஆமே. (௭௭)

அகாரமென்றசந்திரனும் வாசிதானும்
அப்பனேஅகாரமென்ற பொருள்தான்ஐயா
உகாரமென்றபொருளை அல்லோவெளியில்தோன்ற
உத்தமனேஅண்டமென்ற பொருள்தான்என்றும்
சிகாரமென்றசிற்றண்டம் ரவிதான்என்றும்
சின்மயமேவிளங்கிநின்ற உகாரம்ஆகும்
மிகாரமென்றபிண்டம் அடாஉகாரம்ஆகும்
மிக்கபனபேரண்டம் உகாரம்ஆமே. (௭௮)

## மகாரதீட்சை.

உகாரமென்றஉவர்ப்பூவும் உகாரம்ஆகும்
உத்தமனேரவிநீஜம் உகாரம்ஆகும்
வகாரமென்றபொருள்எல்லாம் உகாரத்தாலே
வகைகண்டுசெய்வோர்க்குப் பலிதம்ஆகும்
மகாரமென்றஅண்டத்தால் கோடிதொகதம்
மக்களேசித்திசெய்யும் வகைஇதாகும்
அகாரமென்றபொருள்அதுதான் உகாரத்தில்சேர்ந்தால்
அப்பனேசித்துவிளையாடல்ஆமே. (௭௯)

## அஷ்டகர்மம்.

ஆடலாம்இன்னம்ஒரு சித்துகேளாய்
அப்பனேஅஷ்டகர்மம் அறுபத்துநான்கும்

தேடலாம்இக்கருவைக்கொண்டேஆடி
ஜெயிக்கலாம்இத்தொழிலும் திரம்அதாக
நாடலாம்உன்னைவெல்வார் உலகில்இல்லை
நாதாக்கள்மெச்சும்இந்தக் கருவுதப்பா
பாடலாம்அடக்கம்உள்ள கருவைத்தானும்
பதனமடாபதனமடா பித்தாஞ்சே. (அ௰)

மாரணவித்தை.

வேறு.

பித்தாஞ்சு கொடியதுகூட்டி
மத்தெனத்தயிலம் வாங்கியேகொண்டு
எத்துடன்எட்டி விரைத்தயிலம்சேர்
பத்துடன்தில்லைத் தயிலமும்கூட்டே. (அக)

கூட்டியேகேசரி பித்தைஎடுத்து
வாட்டியேசந்திரன் அண்டமும்சேர்த்திடு
பூட்டியஅண்டம் மலப்புளித்தயிலம்
நீட்டியேவீரமும் பூரமும்சேர்த்திடே. (அஉ)

சேர்த்திடுநாபி வெள்ளையும்கெவுரி
போற்றிடுஉள்ளியும் பொற்கடுக்காயும்
மாற்றிடுசரியாய் வகையதுகொண்டு
ஆற்றிடும்தயிலம்இவ் விதமாய்அரைத்திடே. (அங)

அரைத்துவழித்துவை மேதியின்சிமிழில்
உரைத்துவைபூசை உமையாள்தன்மூத்தாள்
பரைத்திடுதாபதேவி நசிநசிஎன்று
கரைத்திடும்ஆயிரத் தெட்டுருஆமே. (அச)

உருவதுதீர்ந்து ஒடுக்கத்தில்வைத்திடு
அருவதுஆக ஐங்காயம்கேளாய்
கருவதுமஞ்சள் கடுகுவெள்ளுள்ளி
பருவதுகாயம் வெந்தயம்ஆமே. (அரு)

ஆமதுவெள்ளை கெவுரியும்வீரம்
போம்துபூரம் புழுகுடன்பூநீர்
தாமதுஎல்லாம் சரியிடைக்கூட்டி
நேமதுகுருவும் நேயமாம்இடையே. (அசு)

இடையதுசேர்த்து இளகஅரைத்திடு
மடையனேமத்தன் தயிலத்தால்ஆட்டி
விடையதுஉருவாய் வேண்டிஎடுத்திடு
உடையவன்கருவை ஒக்கவும்வைத்திடே. (அஎ)

வைத்துஉருவின் வயிற்றைக்கிழித்திடு
நைந்துநடுவில் நாமமும்சாத்தி
மெய்த்தகருவை விழிமுதல்திட்டி
நித்தியபூசை நேசமாய்ச்செய்திடே. (௮௮)
செய்திடும்போது தீராதுன்பமாம்
நொய்திடும்உடலும் நோக்கறியார்கள்
நைய்திடஎன்றால் நறுக்கிடுபாவையை
வைதிடமரணம் வருமதுபாரே. (௮௯)

வளமதுஆக வயணமும்கேளாய்
குளமதுதனிலே கொண்டுபோய்ப்பாவையைச்
சலமதுநிரத் தண்ணிரில்கரைத்து
உளமதுஆகவும் என்றுவூற்றிடே. (௯௰)

ஊற்றியபின்பு ஓடுமேபீடை
மாற்றியேவந்து வரைந்திடுதகடு
தேற்றியதாகச் சிவயநமஎன்று
சாத்தியநாமமும் தான்வைத்துக்கட்டிடே. (௯௧)
கட்டியபின்பு கழிந்திடும்பீடை
எட்டியகருவை எடுத்திடுதோளில்
சுட்டியர்இடத்தில் சொல்லஒண்ணாது
மட்டியனேகேள் வைத்துவிளையாடே. (௯௨)

வைத்தகருவை வகைஒருவர்க்கு
உற்றதுசொல்லி உடைத்திடவேண்டாம்
சத்தியஞ்சொன்னேன் கலைதான்தெரித்திடும்
புத்தியதாகப் புனிதம்பதனமே. (௯௩)

பதனமதாகப் பதனமேபண்ணி
விதனமும்வந்தால் விளையாடிப்பாரு
அதனமதாக ஆடலும்வேண்டாம்
இதனமதாக இடுக்கம்செய்யாதே. (௯௪)
செய்தார்க்கிந்த இடமானகருவை
நொய்திடச்செய்தால் நோக்கும்முன்பழியாம்
பைதிடப்பழகிப் பயந்துநயந்திடு
வைதிடஉலகம் வளமாய்வணங்குமே. (௯௫)

வணங்கும்இக்கரு மாட்டிடும்ஒடுக்கி
இணங்கியசாஸ்திரம் எல்லோரும்சொன்ன
பணங்கியநூலில் பாடியமோடி
துணங்கியேஅஞ்சனம் சொன்னேன்சூட்சம். (௯௬)

அஞ்சனம்.

சூட்சமதாகச் சொல்கிறேன்அஞ்சனம்
பாச்சலாம்இந்தக் கருவைநீகேளாய்

ஏச்சலாம்இந்தச் சந்திரன்மெழுகை
நீச்சலாம்சீசன் பித்துடன்கொடியே. (௯௭)

கொடியதாமஞ்சு கூட்டரும்புற்றில்
வடியுமெழுச்சி சொன்னதுஉண்டு
அடியுமேஅண்ட ஓடதில்கருக்கித்
தடியுமேஅண்டத் தயிலத்தில்ஆட்டே. (௯௮)

ஆட்டியமையைச் சிமிழ்தனில்வைத்து
காட்டியேதீபம் அஞ்சனதேவியை
வாட்டிய-வம-அங்-சிலீம்-என்றுசொல்லியே
மூட்டியஉரு மூவாயிரம்ஓதிடே. (௯௯)

ஓதிட்டெடுத்து உரைத்ததோர்சாஸ்திரம்
வாதிட்டப்படியே வளமாகக்கூட்டிடு
பேதிட்டபூமி பிளந்துதெரிந்திடும்
சாதிட்டம்ஆகச் சத்தியம்ஆமே. (௱)

சத்தியம்ஆகச் சதிராய்நினைத்திடு
முத்திஅதாகிய மோட்சமும்உண்டு
பத்திஅதாகப் பணிந்துஇக்கருவை
நித்தினாயாலும் நினைக்கவேண்டுமே. (௱௧)

நினைத்துப்புவியினில் நிகழ்த்தவேண்டாம்
சனத்தில்வெடித்திடும் தப்பாமல்உன்தலை
கனத்தபொருளைக் கண்டாலும்விள்ளார்
குணத்தைஅறிந்து குறிசொல்லுவாயே. (௱௨)

சொல்லாதபேயைத் துரத்திஅகற்றிவை
நில்லாதுகாயம் நிலைக்குமோபாரு
பொல்லாதபிறவிகள் பூமியில்மெத்த
தள்ளாமல்தள்ளித் தனித்திருப்பாயே. (௱௩)

பாரோநீசித்தர்கள் பகராரகள்இக்கரு
நேரோநீகண்டுநின் றூடும்சித்து
வாரோநீஇக்கரு வாய்த்திடும்வேளை
ஆரோநீஉள்ளே அடருவார்பாரோ. (௱௪)

அடருவார்என்று சொல்லாதேஇக்கரு
படராதுலகம்பழி கொலைசெய்திடும்
அடராதுமிஞ்சி அழும்புகள்செய்தால்
கடல்அதுதள்ளிக் கரைஏறுவாயே. (௱௫)

வசியம்.

கரைஏறும்அத்திரம் கட்டாகச்சொல்வேன்
மறையாமல்முன்னோர் மறைத்தார்கருவை
இறையானசூட்சம் இக்கருஅப்பா
குறையாமல்செய்தால் குணமாய்உரைத்திடே. (௱௬)

உரைக்கிறேன்வசியம் உலகம்வணங்கிடத்
தரைக்கிறேன்வெள்ளை ஆவாரைமூலம்
இறைக்கிறேன்தயிலம் இதமாய்எடுத்திடு
மறைக்கிறேன்சந்திரன் மையதுசேரோ. (௱௭)

சேருநீபுனுகுடன் சேர்த்துக்கோரோசனை
வாருநீமஞ்சள் தயிலமும்சேர்த்திடு
பாருநீபித்துடன் கருவையும்கூட்டிடு
ஆருநீநன்றாய் அரைத்துவழித்திடே. (௱௮)

வழித்துமேசிமிழில் மையதைவைத்திடு
தெளித்துமேபூசையில் தேவியைப்போற்றிடு
களித்துமே-வசிவ-என் கருதியேஓது
அளித்துமேஉலகம் அடிபணிந்திடுமே. (௱௯)

அடிபணிந்தன்னிடம் அடிமைகள்ஆகி
இடிபணிந்தேவல் என்னெனக்கேட்பார்
வடிபணிந்தேபொருள் வழுத்துகேட்பவர்
முடிபணிந்திடுவர் முறைதெரிந்தாடே. (௱௰)

ஆக்ருஷணை.

ஆடியஆக்ருஷணை அதுகேளாய்
தேடியஅரசின் வேரைஎடுத்திடு
கூடியதயிலம் இறக்கிவடித்திடு
வாடியபித்தை வளமாய்எடுத்திடே. (௱௰௧)

எடுத்ததோர்பித்தை இதமாய்அரைத்திடு
கொடுத்திடும்தயிலம் கூடவேவிட்டிடு
வெடித்ததோர்புனுகு கோரோசனைகூட்டிடு
நடித்திடற்கான சந்திரன்மெழுகே. (௱௰௨)

மெழுகுடன்நீசன் பித்துமேகூட்டி
நழுகுறநன்றாய் அரைத்துவழித்துத்
தழுவுறும்தந்தச் சிமிழில்அடைத்திடு
ஒழுகுறப்பூசையில்-சிவஙிலிம்-என்றிடே. (௱௰௩)

என்றிடப்பரியின் தகடதுசெய்திடு
நன்றெனஉடலின் சக்கரம்எழுதிடு
வென்றெனப்பட்சி எழுத்தைப்பதித்திடு
கன்றெனநாமமும் கருவையும்பூசிடே. (௱௰௪)

பூசிட்டபூசையில் போற்றியேவைத்திடு
நேசித்ததன்உரு நேரானநூற்றெட்டு
ஆசித்தபேர்களும் அப்போதேவந்திடும்
பேசிட்டமோகனம் பேசுவேன்கேளே. (௱௰௫)

## மோகனம்.

கேளாதுமோகனம் கெட்டியதாய்விடும்
பாழதுஇல்லை பலிப்பதுதிண்ணமே
சூழதுசம்பழம் சாறலமேவாங்கிடு
வேளாதுஆகத் தயிலம்இறக்கிடே. (௱௰௬)

இறக்கிய தயிலம் இதமாய்எடுத்திடு
பறக்கிறகிளியின் பித்தைப்பகுத்தெடு
பிறக்கியசந்திரன் பித்துமேகூட்டிடு
வறக்கியமஞ்சள் தயிலமும்சேர்த்திடே. (௱௰௭)

சேர்த்துமேதாரம் கோரோசனைகூட்டியே
ஆற்றுமேநன்றாய் அழகாய்அரைத்திடு
பார்த்துமேபூசை பதிவாகவைத்திடு
ஏர்த்துமே-வங்-சிங்-கிலீம்-என்றுஓதிடே. (௱௰௮)

ஓதியமையை உன்புருவத்தில்
நீதியாய்வைத்து நினைத்தபேர்சொல்லில்
ஜாதிகள்நீங்கித் தன்வசம்ஆகும்
ஆதியாம்கருவை அடக்கிவைப்பாயே. (௱௰௯)

## பேதனம்.

அடக்குவதென்ன பேதனம்அறிவாய்
முடக்கும்முறையை மொழிந்திடும்போது
திடக்கும்கருவைச் செப்பஒண்ணாது
மடக்கும்பேதனம் வகைஅதுகேளே. (௱௨௰)

வகைஅதைக்கேளாய் வரும்கருமத்தின்
தகைஉறத் தயிலம் சமர்த்துடன்வாங்கிடு
பகைஅறக்கேசரி பித்துடன்சேர்த்திடு
நகைஅறநன்றாய் நாடிஅரைத்திடே. (௱௨௰௧)

அரைத்திடுசந்திரன் பித்துமேகூட்டி
உரைத்திடுகாந்தம் ஒக்கவேவைத்திடு
நரைத்திடுநன்றாய் அரைத்துவழித்திடு
திரைத்திடும்மேதியின் சிமிழ்தனில்வைத்திடே. (௱௨௰௨)

வைத்திடுபூசை-மங்-சிங்-பங்-என்று
நொய்த்திடுஉருவில் நூற்றெட்டேஆனால்
தைத்திடும்காரியத் தகட்டினில்உருவை
மைத்திடுநாமமும் மையதில்பூசிடே. (௱௨௰௩)

பூசியேபூசை புகழ்பெறவைத்திடு
வாசியைநிறுத்தி மதிதனில்ஏற்றிடு
தேசியின்குதிரைக்கால் கீழேபுதைத்திடு
தோஷியும்ஓடித் துவண்டலைவானே. (௱௨௰௪)

அலைவதுதின்னம் அதையும்எடுத்திடு
குலைவதுஎக்கியம் குணமாகச்செய்திடு
நலைவதுசாம்பல் நன்ருய்எடுத்திடு
மலைவதும்இல்லை பாலில்கரைத்திடே. (௱௨௫)

கரைத்துமேதண்ணீரில் கலந்துகுழப்பிடு
அரைத்துமேஜையைத் தரையில்சிதம்பரம்
முறைத்துமேயிவைநம என்றுவைத்திடு
நிறைத்துமேசித்தன் தனக்குநீகட்டிடே. (௱௨௬)

கட்டிடும்போது கலவாதுமீடை
விட்டிடும்வெறியும் வெளிராகிப்போவான்
தொட்டிடும்தம்பனம் சொல்லுவேன்கேளாய்
மட்டிடும்போது வகையாகத்தானே. (௱௨௭)

தம்பனம்.

தானென்றுபியன் மூலமேகொண்டுவா
பருனதயிலம் இறக்கிஎடுத்திடு
ஊனுனமூனன் பித்தைப்பகுந்தெடு
விருனமீகசரி மண்டைத்தயிலமே. (௱௨௮)

தயிலமும்கூட்டிச் சந்திரன்பித்துடன்
அயிலமதாக அரைத்துஎடுத்திடு
துயில்மொழியாள்தன் துடக்குகூட்டு
மயல்விழிமைஎன நன்ருய்அரைத்திடே. (௱௨௯)

அரைத்துசிமிழ்தனில் அன்புடன்வைத்து
உரைத்திடும்பூசையில்-ஓம்-நம்-என்ருயிரம்
இரைத்திடும்உருவைச் செபம்பண்ணிவைத்திடு
மறைத்திடும்மண்டையின் ஓட்டில்வரைந்திடே. (௱௩௰)

வரைந்தஉருவில் வகையுடன்நாமம்
பரைந்தகருவைப் பதிவாய்த்தடவியே
நிறைந்ததோர்வஸ்துடன் நேமமாய்ப்பூசைசெய்
குறைந்ததோர்காளிக் கோவிலில்வைத்திடே. (௱௩௧)

வைத்திடும்போது வாய்பேசார்கள்
லைத்திடும்கால் கைநாடவும்போகா
கைத்திடும்பிரமை தானதுஆகும்
எய்த்ததோர்பின்பு எடுத்திடுவாயே. (௱௩௨)

எடுத்துமேகருவை இதமாய்க்கழுவிடு
படுத்துமேபாவையைத் தண்ணீரில்விட்டிடு
கொடுத்துஉச்சாடனந் தகடதுகட்டிவை
விடுத்துமேபோகும் வெளிராகுவானே. (௱௩௩)

வெளியாகிவந்து விதிஉள்ளமட்டும்
சலியாமல்நின்று தான்வாழுவானே
பழியாகஎன்றால் பண்ணியதொழிலைக்
குழியாகமூடிக் கொண்டெரிப்பாயே. (௱௩௪)

எரித்திடும்போது இறந்திடும்காயம்
பரித்திடும்அக்கியம் பண்ணினால்இல்லைத்
தறித்திடும்பாவம் தான்வந்துசுற்றும்
குறித்திடும்என்று குணமாய்எடுத்திடே. (௱௩௫)

உச்சாடனம்.

குணமாம்உச்சாடனம் கூறுவேன்கேளாய்
வனமானபேயின் குமட்டிசமூலம்
இனமானதயிலம் இறக்கிஎடுத்திடு
கனமானகாக்கையின் பித்தைஎடுத்திடே. (௱௩௬)

பித்தைஎடுத்திடு பெருநரிமண்டையின்
சத்தையும்கூடவே சந்திரன்மெழுகுவை
நத்தையும்சீசன் பித்தைஎடுத்துவை
வைத்தகைநன்றாய் அரைத்துவழித்திடே. (௱௩௭)

வழித்துச்சிமிழ்தனில் வளமாகவைத்திடு
குழித்துமேபூசை குணமாகச்செய்துவை
அழித்திடும்பேரை அண்டோட்டுருவை
தழித்திடஆயிரம்தான் உருசெய்யே. (௱௩௮)

செய்படாபூசை திரமாகச்செய்தால்
உய்யடாமட்டி உரையடாஉருவைச்
செய்யடா-மங்-நங்-சங்-என்றுசாற்றிப்
பொய்யடாபோகாமல் பொருந்தியேசெய்யே. (௱௩௯)

செய்தேஎடுத்திடு சீர்பேர்உடையவன்
கொய்தவன்காலில் கீழேபுதைத்துவை
கொய்தவன்ஓடி நடுங்குவான்சாம்பலில்
வைதவன்கேட்டு பதம்கொள்ளுவானே. (௱௪௰)

கொள்ளுவான்என்று குறியாய்இருந்திடாய்
விள்ளுவான்வெறியில் பேய்பிடித்தவன்போல்
துள்ளுவான்சண்டி சுடுகாடுபோகத்
தள்ளுவான்வீணே தான்இருக்காதே. (௱௪௧)

இருக்காமல்நீதான் எடுத்திடுபுண்ணியம்
நறுக்காமல்பாவையை நற்பாலும்தண்ணீரும்
குறுக்காமல்சேர்த்துக் குணமாய்க்கழுவிடு
பருக்காமல்தம்பனத் தகடதுபோடே. (௱௪௨)

போடவேபூசைப் புகழாய்வயிரவன்
கோடவேகோயிலில் செய்ததுசேரவை
விட்டுவிட்டு வெளிப்போகமாட்டான்
கூடவித்வேஷணம் குணமாகச்செய்திடே. (௱௪௩)

வித்வேஷணம்.

குணமானகய்பிலி சமூலமும்வாங்கிடு
வணமானசோரி எருவையும்சேர்த்திடு
கனமானதயிலம் களிவாய்எடுத்திடு
பிணமானகரியில் பிசைந்துஉரைத்திடே. (௱௪௪)

உரைத்தழித்திடு உடன்சேருசந்திரன்
நரைத்துநாய்பித்து நஞ்சும்கொடியும்
விரைத்தவன்மண்டையில் உருவைவிளைத்து
தரைத்தவன்பேரைச் சாத்திவைசக்கரம். (௱௪௫)

சக்கரம்எழுதிச் சாற்றிடுஉருவை
உக்கிரமாய்ஓதிடு-நசி-மசி-என்று
வக்கிரமாக மயானத்தில்வைத்திடு
திக்கிரமதாகப் பெலியும்கொடுத்திடே. (௱௪௬)

பெலியும்கொடுத்துப் புதைத்திடும்போது
கலியான்வெறியில் கலங்குவான்பாரு
சலியாதுழன்று தவித்திடும்அன்றியும்
வலியானவெறியால் மாளுவான்பாரே. (௱௪௭)

மாளுவான்என்று மனம்துணியாதே
கோள்உறும்கோபம் கொடுமைசெய்யாதே
பாழுறும்பாவம் பழிகொலைக்கஞ்சி
ஏழையன்ஒன்றே எடுத்திடுபுண்ணியம். (௱௪௮)

புண்ணியம்தானே பொருந்தநினைத்திடு
கன்னியர்க்கன்னம் களிவாய்க்கொடுத்திடு
பன்னியின்நெய்யில் தண்ணீரும்சேர்த்திடு
மன்னியஉருவை மறையஅழித்திடே. (௱௪௯).

அழித்திடக்கரைத்து ஆற்றினில்விட்டிடு
ஒழித்திடமோகனத் தகடதுபோடு
செழித்திடப்பீடை விலகிடும்போது
பழித்திடஉலகில் பதிவாய்இருப்பனே. (௱௫௰)

மாரணம்.

இருப்பனேமாரணம் எதிராகச்செய்திடு
அருப்பனேஎட்டி சமூலமும்வாங்கிடு
குருப்பனேஅன்ன சத்தைஎடுத்திடு
வருப்பனேபித்தன் மண்டையைச்சேர்த்திடே. (௱௫௧)

சேர்த்துத்தயிலம் திரமாய்எடுத்தவை
பார்த்தப்பிணைத்தின் தயிலமும்சேர்த்திடு
கூற்றுவன்ஆன சந்திரன்மெழுகைக்
கார்த்துஇருந்து கொடிநஞ்சும்சேர்த்திடே. (௫௨)

சேர்த்துத்தயிலம் திரமாகவிட்டளை
ஆற்றுஅலரிப் பலகையில்உருவுசெய்
மூத்தவள்பெரும் முதலாளிநாமமும்
சாற்றியேஒதித் தான்பூசுஉருவிலே. (௫௩)

உருவினில்பூசி-ஓம்-ஆம்-நசி-என்று
மருவினில்விலக்கச் சிலைமேல்வைத்திடு
பருவினில்சுழல்கால் கொண்டதுமூடிவை
சருவினில்கள்ளி எருக்கலம்சுப்பலே. (௫௪)

சுப்பலால்சுட்டுத் தூள்அதைவாறி
அப்பியேபேரில் இட்டதன்மேலே
துப்பியேதூவிச்-ரூ-ரூ-ரூ-என்று
தப்பியேபோட்டுத் தான்வருவாயே. (௫௫)

வருவாய்பிணைத்தின் வரிசைஎல்லாம்செய்
சருவமும்செய்து தான்வரும்போதில்
பரிவாகமூடிப் பழிவந்துசூழும்
அறிவாகஇத்தொழில் யார்க்கும்செய்யாதே. (௫௬)

செய்யாதேபாவம் செய்திடும்போது
வையாதேகொஞ்ச நாளில்எடுத்திடு
நொய்யாதேஅஷ்ட கர்மத்துக்கெல்லாம்
மெய்யானசந்திரன் மெழுகதுஆமே. (௫௭)

கற்பமுறை.

மெழுகதுகற்ப முறைஅதைக்கேளாய்
பழுதறமுட்டை ரவிவிதைவாங்கி
தழுவறஆவின் பாலதுகூட
ஒழுகுறும்பாத்தின் ஆடதன்பாலே. (௫௮)

ஆடதன்பாலும் அரும்செவ்விளநீர்க்
கூடதுஆகக் கூட்டியேஒன்றாய்த்
தேடதுஆகச் சிறுபாண்டத்திட்டு
நாடதுரவிவிதைத் தொளாந்திரம்செய்யே. (௫௯)

செய்துமேமூடித் திரமாய்எரித்திடு
நொய்யதுசாமம் ரெண்டதுஆனால்
பையவேவாங்கி ஆறவைகுளிர
மெய்யஅரித்தரிக் கோட்டைஉரித்திடே. (௬௰)

உரிந்தகருவை ஒளிதனில்வைத்திடு
கரிந்தபிம்பத்தின்பழச் சாறுவிட்டாட்டிடு
பரிந்தாவிதனில் மூன்றுநாள்வைத்திடு
செரித்தவெள்ளியின் குச்சியால்கிண்டிடே. (௱௬௧)

கிண்டிவைமூன்றுநாள் கிடந்துசென்றுறப்
பன்றியதேதனில் பகரவைமூன்றுநாள்
சுண்டியபோது சுரோணிதத்தேருவை
விண்டிடும்போது மெழுகதுஆமே. (௱௬௨)

மெழுகதுகூட மெய்முலைப்பால்சேர்
அழுகதுகன்னி குடத்துநீர்விட்டிடு
பழுதறக்கிண்டிப் பதமாய்எடுத்திடு
சழுவறச்சத்திமுன் பூசையில்வைத்திடே. (௱௬௩)

வைத்துஎடுத்திடு வடுகனும்தேவியும்
மொத்துஇருந்திடு முன்மலைதன்னிலே
முத்தியும்பெற்று முனையிலேநின்றிடு
சத்தியமாகத் தான்இருப்பாயே. (௱௬௪)

இருப்பதுநாளில் இரவியில்மதிசேர
மருப்பதுதேகம் மனஇனம்இல்லை
கருப்பதுயமன் கடக்கவேபோவான்
பிருப்பனைவிட்டுத் தெளிந்திடுமனமே. (௱௬௫)

மனமதுதேறி மாய்கையும்தள்ளி
குணமதுஆனால் கூற்றுவன்நீங்கும்
சனமதுஆசைத் தள்ளியும்போகும்
இனமதுவாசம் பிதறிடும்பாரோ. (௱௬௬)

வேறு.

பிதறிப்போம்காயம்அது இறுகிப்போகும்
சிறிநின்றதாதுஎல்லாம் வலுத்துப்போகும்
கதறிப்போம்சதைஇறுகி விந்துகட்டும்
கண்ணொளியோகிவந்து முகம்காந்திஆகும்
புதறிப்போம்பாசவினை அகன்றுபோகும்
பங்கயத்தோன்கிருபை உண்டுவசியம்ஆகும்
குதறிப்போம்கூற்றுவனும் விலகிப்போவான்
கூடநிக்கும்எமன்என்ற பாவம்போச்சே. (௱௬௭)

போச்சுதடாமாய்கைஎன்ற பிரமைபோச்சு
பூண்டுநின்றபெண்டுபிள்ளை ஆசைபோச்சு
நேச்சுதடாபிரபஞ்சம் பொய்என்றெண்ணித்
தெளிந்துமனம்வெளியில்நின்று தேறப்பாரு
காச்சுதடா நாதியையும் கழிந்துபோச்சு
காந்தியுமேசோதி ஒளிசுழினைமீதில்

வாச்சுதடாசிவகுருவின் மகிமையாலே
மக்களே அருநீரில் கிருபைதானே. (௱சுஅ)

முப்புவின்மார்க்கம் வழலைஎனினும்அது.

அருநீரின்கிருபையையார் அறியப்போறூர்
அப்பனேதவமுநிவர் அறிந்தஉண்மை
கிருநீரும்பெருநீரும் தேவிநீரால்
ஜெகமுழுதும்பெருகியதோர் நீர்தான்அப்பா
குருநீரும்துருசுநீர் குமரிநீரோ
குண்டலியாம்சத்தி சிவம்ஆனநீரு
பருநீரும்பிரபஞ்ச வாழ்க்கையின்பேர்
படர்ந்தநீர்சுரோணிதநீர் பாருபாரே. (௱சுகூ)

பார்புகழும்முப்பூவின் வகைகயைச்சொல்வேன்
பராபரியும்பார்வதியும் எனக்குச்சொன்னர்
சீர்புகழும்வெள்ளைக்கல் சுன்னம்என்றே
செப்புவேன்அரன்எடுத்து அழுதுகொண்டார்
நேர்புகழும்சித்தர்எல்லாம் கிருபைபெற்ற
நிரந்தரமாய்நின்றதொரு துருசுக்கல்லு
பேர்புகழும்அக்கல்லு நறுக்கிக்கொண்டு
பேசாதேபலம்பத்து எடுத்துக்கொள்ளே. (௱எ0)

கொள்ளுகிறஅமரிபடி எட்டுவாங்கிக்
கூடச்சேர்பூமியிட பூநீர்தானும்
விள்ளடாநான்குபலம் போட்டுநன்றய்
விளாவியேகலக்கிவைத்துத் தெளிவைவாங்கி
செல்லடாகல்லைஅங்கே அதிலேபோட்டுச்
செம்மையுடன்கொதிக்கவைத்துப் பதத்தில்வாங்கி
மெள்ளடாஅமரியினல் சுத்திசெய்து
மேன்மைஎன்றரவிதனிலே காயப்போடே. (௱எக)

காய்ந்துநன்றய்அதைஎடுத்து முன்போல்செய்து
கட்டாகஇப்படியே பத்துமுறைசெய்வாய்
பாய்ந்தன்னசத்தெடுத்து ரவியில்போட்டு
பக்குவமாய்த்தூள்பண்ணிப் படிஎட்டுக்கு
ஆய்ந்தவர்ன்னநீர்அதுதான் பதினறுகும்
அப்பனேஅதை அளந்துவிட்டுபூதம்
சேர்ந்தபலம்ஒன்றதுவும் கூடப்போட்டு
சேரநன்றய்க்கலக்கிவைத்துத் தெளிவைவாங்கே. (௱எஉ)

தெளிவானஜலம்அதனை அடுப்பிலேற்றித்
திவரித்துக்குழம்பான பதத்தில்வாங்கி
வளியானபீங்கானில் ஊற்றிநல்ல
மக்களேகடும்ரவியில் வைத்தும்போது

சுழியானஉப்பங்கே படரும்பாரு
சுறண்டிஎடுமறுபடியும் அமிபடிநான்கு
குழியானஉப்பதனில் கரைத்துக்கொண்டு
குணமானரவிதனிலே காயப்போடே. (௱௭௩)

போடப்பாஇப்படியே பத்துமுறைசெய்து
புகழ்பெற்றஉப்பதனை எடுத்துக்கொண்டு
நாடப்பாமுன்செய்கற் பொடியும்சேர்த்து
நன்மைஉள்ளபாளைநீர் படிரெண்டுவாங்கி
கூடப்பாகலக்கிநன்றாய்த் தெளிவெடுத்துக்
குறுகிநின்றரவிதனிலே காயவைத்துச்
சாடப்பாஇப்படியே மூன்றுமுறைசெய்தால்
தன்மைஉள்ளசுன்னம்ஆய் இருக்கும்பாரே. (௱௭௪)

சுன்னம்அதைக்கலவம்அதில் இட்டுக்கொண்டு
சுத்தம்உள்ளவெடியுப்பு அஞ்ராம்சாச்சல்
எண்ணம்அதில்கண்டிடைக்கு எட்டில்ஒன்று
எடுத்துமேஅதில்பாதிச் சாரம்சேரு
வண்ணம்உள்ளசினமது சாரம்இடைபோடு
மக்களேவிரமது பூரம்ரெண்டும்
நுண்ணிமையாய்ச்சினம்இடை கூடப்போட்டு
துப்புரவாய்ப்பாளைநீர் விட்டுஆட்டே. (௱௭௫)

ஆட்டிநன்றாய்வழித்தெடுத்து வில்லைதட்டி
அப்பனேரவிதனிலே காயப்போடு
மேட்டிமையாய்த்திரியாதே வில்லைகாய்ந்தால்
வெண்மைஉள்ளஓட்டில்வைத்து ஓடுமூடி
தாட்டிகமாய்ச்சீலைமண் வலுவாய்ச்செய்து
தணல்எறன்முரூப்புடத்தில் வைத்தெடுத்துச்
சூட்டியதோர்மறுபடியும் கலவத்திட்டுச்
சுரோணிதநீர்விட்டாட்டிப் புடத்தில்போடே. (௱௭௬)

புடம்ஆறிவில்லைதனை எடுத்துக்கொண்டு
பேசாமல்கலவம்அதில் பொடியேசெய்து
மடமாறிஆனகன்னிப் பழச்சார்விட்டு
மக்களேதுவளஅரைத் தெடுத்துக்கொண்டு
குடமாறிச்சிறுவடமாய் எடுத்துக்கொண்டு
கூடச்சேர்ஒருதிங்கள் ரவியில்தானும்
ஜெடமாறிமாற்றிநின்ற பிஞ்சைவாங்கிச்
செம்மையுடன்முப்பூவில் கொஞ்சப்போடே. (௱௭௭)

போட்டவுடன்ரவிதனிலே வைக்கும்போது
புண்ணியனேபுஷ்டிஎல்லாம் கரைந்துபோகும்
நாட்டமுடன்தெளிவுதனில் வீரம்பூரம்
நன்றாகப்பொடிசெய்து அதிலேபோட்டு

நேட்டமுடன்கடோரியில் வைத்துப்பாரு
தேவியென்றபூரணியாள் கிருபையாலே
வாட்டமுடன்மேல்படரும் உப்பைவாங்கி
மறுபடியும்நீங்காலில் உலரவையே. (௱௬௮)

உலரவைப்பாய்இப்படியே எடுத்துக்கொண்டு
உத்தமனேபதினிங்கள் உப்பும்கூட
மலரவைத்தமுப்புடன் சேர்த்துக்கொண்டு
மகத்தானகன்னியிடக் குடத்துநீரால்
தளரவைத்துஅரைத்துநன்றாய் வில்லைதட்டித்
தண்மையுடன்ஓட்டினில்வைத் தோடுமூடிக்
கலரவைத்துமண்சீலை வலுவாய்ச்செய்து
கருவாலிப்புடம்இடவே சுன்னம்ஆச்சே. (௱௬௯)

ஆச்சப்பாசுன்னம்அதை எடுத்துக்கொண்டு
அப்பனேவடுகனுக்கும் தேவிபூசை
பாச்சப்பாவஸ்துவுடன் சுத்திவைத்து
பலகாரம்பழவகைகள் பரமான்னங்கள்
காச்சப்பாபாலமுது நைவேத்தியம்செய்து
கனமானதூபமுடன் தீபம்காட்டி
வாச்சப்பாஅகதேசி பரதேசிக்கு
வளமாகஅன்னம்இட்டு உபசாரம்செய்யே. (௱௭௰)

செய்துகொண்டுபெண்பிள்ளை மாய்கைதள்ளிச்
சின்மயமேபெரிதென்று மனதில்எண்ணிக்
கொய்துகொண்டபிரபஞ்ச மாயைஎல்லாம்
கூடழிக்கவேவந்த கூற்றுவன்தான்என்று
நொய்துகொண்டஜடலம்அது வலுக்கவேண்டி
நோக்கிமனம்குருபதமே கதிஎன்றெண்ணி
செய்துகொண்டமுப்பூவில் பணவிடைகால்கொண்டால்
ஜெடத்தில்உள்ளபிணிகள் அற்றுச் சித்தாய்ப்போமே. ()

கெவுரிச்சுன்னம்.

சித்தானமகிமையைத்தான் என்னசொல்வேன்
ஜெடம்வலுக்கும்காந்தியுமோ அதிககாந்தி
முத்தானமுப்பூவின் மார்க்கம்எல்லாம்
முறையோடேசொல்லிவைத்தேன் சுத்தமாகப்
பத்தானமுப்பூவில் பணவிடைதான்எடுத்து
பாச்சலாம்அமிர்தம்விட்டுக் குழைத்துக்கொண்டு
கொத்தானகெவுரிக்குக் கவசம்கட்டிக்
குணமானரவிதனிலே காயப்போடே. (௱௭௨)

காயவைத்துஅதன்மேலே நெருப்புமூலிக்
கட்டாகத்தான்வைத்துக் கவசம்செய்து

நேயம்வைத்தமண்சிலே வலுவாய்ச்செய்து
நேர்மையுள்ளகுக்குடத்தில் வைத்தாய்ஆனல்
சாயம்வைத்துவெண்மையதாய் ஆகும்பாரு
தப்பாதுவெள்ளிதனில் பத்துக்கொன்று
நேயம்வைத்தகெவுரிதனை ஈந்தாய்ஆனல்
நேர்மையுள்ளபத்துவய தாகும்பாரே. (௱அ௩)

பாரடாசாயமுள்ள சரக்கெல்லாம்தான்
பண்ணுவாய்முன்போலே செய்துக்கொண்டு
நேரடாவெள்ளிசெம்பு பித்தளையும்ஈயம்
நேர்மையுள்ளவகைகண்டு கொடுத்தாய்ஆனல்
தோடாவயதங்கே மிகவும்காணும்
செய்துகொண்டுதபசுநிறை வேறவேண்டிக்
காரடாவயித்தியங்கள் செய்யும்போது
கண்மணியேமூப்பூவும் சேர்த்துப்பாரே. (௱அ௪)

சிவஞானம்.

சேர்த்துப்பார்வயித்தியத்தில் உன்னைமிஞ்சி
செகத்திலேவேறும்ஒரு மனிதர்உண்டோ
பார்த்துப்பார்ஆண்மைமிஞ்சிப் பேசவேண்டாம்
பரதேசிஎளியவன்போல் உலகத்துள்ளே
கார்த்துப்பார்எவர்மிஞ்சிப் பேசினும்
கருதாதேமனம்அடங்கிக் கனிந்துப்பேசு
கூற்றுப்பார்பிரபஞ்ச மாயைஎல்லாம்
கூடிவரப்போறதில்லை ஞானமிலைபெரிதே. (௱அ௫)

ஞானம்என்றஅறிவல்லோ விவேகம்புத்தி
நல்மனதாம்அறிவுடனே தண்மைவேண்டும்
ஈனம்இன்றிஈவதும் இரக்கம்வேண்டும்
எவ்வுயிரும்தன்உயிர்என் றெண்ணவேண்டும்
பானம்இன்றிப்பாசம்அதை அகற்றவேண்டும்
பரமன்என்றசிவன்செயல் என்றுணரவேண்டும்
மோனம்என்றரவிதன்னில் சார்ந்துநின்று
முத்திபெறப்பழக்கத்தால் பூண்டுபாரே. (௱அ௬)

பூண்டுபார்மனதங்கே தெளியாவிட்டால்
பொல்லாதமாயைவந்து கொல்லும்கொல்லும்
ஆண்டபிரான்சிவன்மகிமை என்றறிந்து
அப்பனேமதிதேயப் பழக்கம்பண்ணி
தாண்டவமாய்அங்குநின்று விளையாடும்கூத்தை
சந்ததமும்விலகாமல் பிசகாமல்தான்
தூண்டில்அல்லோதீபஒளி ஜோதிகாணும்
தாண்டாமல்தாண்டுவது சுழினை தானே. (௱அ௭)

சுழியான்பூரணமே கதிஎன்றெண்ணிச்
சுற்றிவரும்வாசியைத்தான் நிறுத்தல்செய்து
வழியானரவிஅல்லோ சிவயோகம்ஆகும்
மக்களேசிவதீட்சை அதிகதீட்சை
பழியாகநின்றதடா மாயவாழ்க்கைப்
பற்றிஅல்லோதொடர்ந்ததடா பழியும்அங்கே
நெளியாமல்நின்றுடனே சித்தன்சித்தன்
நிஜமானசிவயோக வாழ்க்கைதேடே. (ா௮௮)

சிவயோகவாழ்க்கையிலே நிற்கும்போது
தீராதபிணிகள்வரும் ஆசைபூணும்
நவயோகம்ஆனதன்றே பொருளின்ஆசை
நத்துகின்றபெண்ணாசை மண்ணின்ஆசை
தவயோகம்கெடுப்பதற்கு ஆசைமிஞ்சிச்
சண்டாளமாயையிலே சுழன்றுநொந்து
பவயோகம்ஆகும்இந்தக்கூ டழிக்கஅந்தப்
பற்றிநின்றஆசைஎல்லாம் அடித்துப்போக்கே. (ா௮௯)

போக்கிஅல்லோஅறிவை அங்கேரவியில்சேர
புண்ணியனேமதிதேயப் பழக்கம்பண்ணி
வாக்கியமாய்-வங்-என்று மதியைவாங்கி
மகத்தானபூரணத்தில்-அங்-என்றூன்றி
போக்கியமுடன்-சிங்-என்று தவறிடாமல்
உத்தமனேரவியில்நின்று உறுதிஆக
பாக்கியமேஇதுஎன்று பாசம்வைத்துப்
பழகில்மதிதேய்ந்துரவி பிலக்கும்பாரே. (ா௯௰)

பிலமானரவியில்நின்று தேறவேண்டும்
பேதமில்லாப்பூரணத்தில் நிறுத்தவேண்டும்
தலமானதலம்அறிந்து சாரவேண்டும்
சங்கையுடன்மவுனம்அதைத் தாக்கவேண்டும்
குலமானசிவயோக வாழ்க்கைவிட்டால்
கூடவந்துமாயைஅது இழுத்துக்கொல்லும்
நலமானதேவிஅல்லோ ரவியில்நின்று
நாடாமல்பண்ணிவைக்கும் கூத்துதானே, (ா௯௧)

## திருநடனம்.

கூத்தென்றதிருநடனக் கூத்தைப்பாரு
கோடிரவிஒவ்வாது கண்ணேகூசும்
சாத்தென்றசுழிமுனையில் சார்ந்துநின்றால்
சகலசவுபாக்கியமும் தானேஉண்டாம்
மாத்தென்றஇல்லறத்தில் இருந்தால்என்ன
மலைஏறிக்காடுகளை போனால்என்ன

வாக்கிதன்றவைசிஅங்கே சைவசமேதானால்
மங்களசிவயோகம் வரிசைஆமே. (௬௯௨)

வரிசைஅன்றபூரணமே தெய்வம்தெய்வம்
மகத்தானபூரணமே கெதிஎன்றெண்ணி
உரிமையுடன்நின்றவனே சித்தன்சித்தன்
யோகிஅவன்பரதேசி ஞானிதேசி
கரிசைஎன்றஅண்டரண்ட பதம்கடந்து
கண்ணிவைக்குள்சுற்றிவரக் கமனம்ஓடி
நெரிசையுடன்காண்போர்க்கு இவரேபேயன்
நெறிதப்பிச்சொன்னவனே பேயன்ஆமே. (௬௯௩)

பேயன்என்றுசொல்லுவது ஆர்க்குமைந்தா
பெரிதானகாமவலைச் சிக்கினோர்கள்
மாயம்என்றமாயையிலே அழுந்துகின்ற
மனம்உள்ளோன்பேயன்என்ற பேர்உள்ளோன்ஆம்
தேயம்இன்றசிவமதமே பூண்டதானால்
தெய்வம்என்றுபோராச்சு சிவரூபம்ஆச்சு
நாயம்என்றசொல்ஆச்சு கனிநம்ஆச்சு
நாதாக்கள்என்றவரை நாடலாமே. (௬௯௪)

சிவராஜயோகம்.

நாடலாம்மனம்அங்கே நாடும்போது
நலமாகஇன்னம்ஒரு பொருளைக்கேளாய்
தேடலாம்ஒளிகுழின் தாமரையைத்தானும்
சிவ-எனவேகமர்வாசற் குள்ளேசெல்ல
ஊடலாம்நாள்தோறும் பழக்கம்பண்ணி
உத்தமனேசுழிமுனையின் உள்ளேநின்றால்
விடலாம்ரவிமதியும் பாசம்தள்ளும்
விளங்கும்அடாசோதிநின்ற இடத்தைப்பாரே. (௬௯௫)

சோதிநின்றஇடம்அல்லோ அமிர்தவாசல்
துலங்கவேபாசம்அதை அறுத்துத்தள்ளும்
வீதிஎன்றபாசம்அது அகலும்போது
வீழுமடாஅமிர்தரசம் மேவிக்கொள்ள
ஆதிஎன்றதேகம்அது இறுகிப்போகும்
அப்பனேசிபதுளி போலேமின்னும்
வாதிஎன்றுபேர்ஆச்சு மகிமைஆச்சு
மகத்தானபூரணத்தின் மகிமைதானே. (௬௯௬)

மகிமைஎன்றஅண்டம்எல்லாம் சுற்றும்போது
மகத்தானஉச்சிமலே வளையில்லாது
மகிமைஎன்றஉச்சிமலே கண்டோன்சித்தன்
மகத்தானசித்தரில் பொய்கணவன்தானும்

மகிமையென்றபேர்உடையான் அவனைப்போலும்
மனதுருகிநின்றவர்கள் யாருமில்லை
மகிமையென்றசித்தன் அவன்யோகிதேசி
மனக்குறைகள்இல்லாத மவுனியாமே. (௱௯௭)

மவுனியென்றசித்தர்மெச்சும் வழிஉள்ளானை
மகிழ்ந்துகொண்டார்முனிவர் சித்தர்மகிழ்ச்சியாக
கெவுனிஅவன்சித்தரிலே அவனைப்போலும்
கேள்விளங்கும்கேட்டதில்லை திரமோமெத்த
பவனியென்றஉலகம்எல்லாம் நிமைக்குமுன்னே
பருந்தோடிஅவன்வருவான் பகர்ந்தபிள்ளை
பவனிதனில்வளர்ப்போர்கள் மிகப்பெற்றோர்கள்
பார்க்கவென்றால்உலகதனில் கண்டிலேனே. (௱௯௮)

கண்டிலேன்சித்தர்களில் முனிவர்தன்னில்
கயிலாசவர்க்கம்அதில் அநந்தம்கோடி
விண்டிலேன்அண்டம்வரைச் சுற்றிப்பார்த்து
மெய்ஞ்ஞானபோதம்அதை விரும்பினோர்கள்
மண்டிலேன்கண்டதில்லை எனக்குநாதன்
மதிகுளிரச்சொல்லிவைத்த வார்த்தைஅப்பா
பண்டுபோய்தவமகிமை பெற்றபேர்கள்
பரிவாகத்தான்இருந்து வாழ்வார்பாரே. (௱௯௯)

வாழுவதுபூரணத்தை நம்பினோர்கள்
மகத்தானரவியைவிடா திருந்தபேர்கள்
மீளுவதுகாயகற்பம் கொண்டபேர்கள்
மிஞ்சிநின்றபிரமமிலே கண்டபேர்கள்
மாளுவதுஒருபோதும் இல்லைஇல்லை
மகத்தானதேசியென்ற குருநிறைஎறி
ஆளுவதுதிண்ணம்அது சிவனும்சொன்னார்
அப்பனேகற்பம்அதை அறிவிப்பேனே. (௨௱)

கற்பம்என்றால்அற்பம்அல்ல மதனப்பூடு
கண்டுகொண்டபரதேசி வாசிதேசி
உற்பனமாய்ச்சொல்லிவைத்தேன் உலகம்தன்னில்
உத்தமர்க்குச்சாகாமல் இருக்கஎன்று
விற்பனவிவேகம்உள்ளோர் தம்மைக்கண்டு
மேதினியில்விள்ளாமல் அடக்கம்செய்து
சற்பனைகள்செய்யாமல் பூடுவாங்கித்
தன்மைஉள்ளமதிதனிலே சார்வாய்ச்செய்யே. (௨௱௧)

அகாரஉகார மகாரகற்பம்.

சார்வானஅகாரம்அதைப் பூசைபண்ணு
சந்தையுடன்ஆண்டொன்று சென்றபின்பு

ஓர்வானஉகாரம்அதை ஆண்டுகொண்டு
உத்தமனேமகாரம்அதை ஆண்டுகொள்ளு
சேர்வானமூன்றையுமே ஒன்றாய்ச்சேர்த்துச்
செவ்வையுடன்சுத்திபண்ணித் திட்சைபத்துத்
தீர்வானதிட்சைபத்து முடிந்ததானால்
செலுத்தடாஆண்டொன்று திரமாய்த்தானே. (உ௱உ)

திரமாகஆண்டொன்று தீர்ந்ததானால்
சேரடாகடைசரக்கு வீரம்பூரம்
உரமாகக்கெந்தியுடன் லிங்கம்சேரு
உத்தமனேஅரிதாரம் ஓரிடையேகொண்டு
வரமானமுன்கருவில் சமனாய்க்கொண்டு
மக்களேவெடியுப்பு சினம்சாரம்
பரமானமுன்சேர்த்த இடையாய்க்கூட்டு
பாங்காகப்பசளைநீர் விட்டுஆட்டே. (உ௱௩)

ஆட்டியேவழித்துருட்டி வட்டுபண்ணி
அப்பனேரவிதனிலே காயப்போட்டு
திட்டியே ஓட்டில்வைத்து ஓடுமூடிச்
செம்மையுடன்மண்சீலை ஏழும்செய்து
வாட்டியேமுழுப்புடமாய் வைத்தெடுத்து
மக்களேமறுபடியும் கலவத்திட்டு
மூட்டியேஅமிர்தமது விட்டேஆட்டி
முன்போலப்புடத்தினில்வைத் தெடுத்திடாயே. (உ௱௪)

எடுத்துமேகலவமதில் பொடித்துக்கொண்டு
என்மகனேசிவந்தகன்னிப் பாலைவிட்டு
அடுத்துமேஅரைத்துநன்றாய்ப் வில்லைதட்டி
அப்பனேமுன்போலப் புடத்தில்போடு
கடுத்துமேபுடம்ஆறி எடுத்துமைந்தா
கலவம்அதில்முன்போலும் பொடித்துக்கொண்டு
தொடுத்துமேகுடத்துநீர் விட்டேஆட்டித்
துவளரைத்துவில்லைதட்டிக் காயப்போடே. (உ௱௫)

போடெடுத்துப்புடம்தனிலே வைத்துப்பாரு
புண்ணியனேபூப்போலே மலர்ந்துநிற்கும்
ஆடெடுத்தகள்ளைப்போல் தேகபீடை
அகலுமடாவாதபித்தம் அறிந்துக்கொள்ளு
தோடெடுத்துப்பூண்டசத்தி எனக்குச்சொன்னாள்
சொல்லிவைத்தேன்உலகதனில் பிழைக்கவேண்டி
கூடெடுத்துக்கர்ப்பமதைப் பின்னேகொள்ளு
குருபூசைசிவபூசை குணமாய்ச்செய்யே. (உ௱௬)

செய்தமேசத்தியிடப் பூசைசெய்து
தியானசித்தர்பதம் பணிந்துக்கொண்டு
நாய்தமோமாதாவைப் பணிந்துக்கொண்டு
என்மகனே அகத்தியர் கன்னாம்சந்து
மொய்தமேரவியைநம்பிச் சுழினைதின்று
மோட்சகாரணருட்சம் அதுதானென்று
நொய்துமேனத்தாயைப் போற்றிசெய்து
நோக்காடப்பணிவிடைதான் கொண்டுதேறே. (உஎஎ)

தேறுவதுஆண்டொன்று சென்றதானால்
தீராதவல்பிணியும் தீர்ந்தேபோகும்
ஆறுவதுபொன்னரம் கடிக்கதானால்
ஆழிந்துவிடும்உன்ஜடலம் நித்தியம்சொல்வேன்
மீறுவதுஅவிழ்தமது நிலைக்கதானால்
மிதமாகஇருக்காதே கனியின்பாகம்
சேருவதுவகையாகச் சேர்த்துக்கொண்டு
தின்னுவார்காயாதி கர்பம்ஆச்சே. (உஎஅ)

ஆச்சப்பா அவமிருத்து எங்கேபோச்சு
அப்பனேஎமனென்ற பிணிதானெங்கே
நீச்சப்பாநிலையாத வாசிகட்டும்
நிலையாதஅமிர்தரசம் பொங்கிவிழும்
வாச்சப்பாவாலைஅவள் குடியும்ஆச்சு
நாதத்தானசித்தனென்ற பேரும்ஆச்சு
போச்சப்பாஉலகம்என்ற வாழ்க்கைபோச்சு
புத்தியால்தாய்பதத்தைப் போற்றிசெய்யே. (உஎகூ)

பொன்முசுட்டை.

போற்றுவதுபொன்முசுட்டை மகிமைகேளாய்
புண்ணியனேமானிடர்க்காய் மனம்இரங்கி
நாற்றிசையும்கீர்த்திபெற்ற மதனப்பூடை
நாடதனில்தேடியே நன்றாய்ப்பார்த்துக்
கார்த்துமேநீஇருந்து வருஷகாலம்
கழிந்தமெள்ளஉறவாடிப் பூவைவாங்கி
தேற்றியேபூவதனைப் பதனம்பண்ணித்
தெளியவைத்துச்சீசாவில் அடக்கம்செய்யே. (உஅ0)

செப்புகொண்டுஅம்மரத்தின் கனியைவாங்கித்
திடமானஅகாரம்அதில் பூநீர்போட்டு
நொய்துகொண்டுபோவதற்கு விரம்பூரம்
நோக்காடஅதின்உள்ளே நுணுக்கிப்போட்டு

பைதாங்கொண்டகனியுந்தனைப் பத்துமுறைச்சுத்தி
பாங்காகச்செய்துகொண்டு பதனப்பண்ணி
நைதாங்கொண்டராசிபுடத்தில் நவநாளும்தான்
நன்றாகக்காய்ந்தபதம் கண்டிடீரே. (௨௱௰௧)

தேறுவதும்அரிதரிமையாகின்ற
திடமாகக்காய்ந்தபதம் எடுத்துக்கொண்டு
ஏறுவதுமதனாதிஜலத்தைவிட்டு
என்மகனேவிண்டிப்பார் உப்பாய்நிற்கும்
கூறுவதுஉப்புடனே முப்பூர்த்திதன்னைக்
குழையவைத்துஅமரிதனில் ரவியும்சேர்த்து
மீறுவதுபுதுக்குடத்தில் தண்ணீர்விட்டு
மீறாமல் நவநாள்தான் ரவியில்வையே. (௨௱௰௨)

வைத்துதான்வீரமுடன் பூரஞ்சேரு
மைந்தனேகெவுரியுடன் துரிசுவெள்ளை
மெய்த்ததொருதங்கமது சரியாய்க்கொண்டு
மீறாமல்கிஷ்டைக்கு அண்டப்பூநீர்
கொய்த்துமேகுடக்குநீர் விட்டேஆட்டிக்
குழையவரைத்துவில்லைபண்ணி ரவியில்வைத்து
நைத்துமேமுழப்புடத்தில் வைத்தெடுத்து
நன்றாகமுன்குருவில் நாலில்ஒன்றுசேரே. (௨௱௰௩)

சேர்த்தரைத்துக்குடக்குநீர் விட்டேஆட்டிச்
செம்மையுடன்வழித்தெடுத்து வட்டுபண்ணி
நேத்தியுடன்காய்ந்தபின்பு முழப்புடத்தில்வைத்து
நெறிதப்பிச்செய்யாதே குருவைமறவாதே
பார்த்திபனேசேமவிஷ்டை தன்னைமறவாதே
பரிவாகத்தான்அறிந்து ஒருவர்அறியாமல்
கார்த்திருந்துகுருமுடிக்கும் காலம்பார்த்துக்
கருணைவளர்பூரணத்தில் கருவைக்கிண்டே. (௨௱௰௪)

## மதியண்டக்கரு.

இன்டிவைத்துக்குருபூசை வைத்துப்போற்றிக்
கிணேசனிடப்பூசைசெய்து வடுகன்பூசை
அண்டம்எல்லாம்படைத்த நின்றசத்திபூசை
அன்பாகச்செய்துகொண்டு அருளைப்போற்று
கண்டதொருசாஸ்திரத்தின் பாடல்கண்டு
கருவைஅங்கேஅனுஅளவு நீட்டிப்பாரு
தொண்டுபண்ணும்வாதமோடு வயித்தியம்எல்லாம்
துலையாதநோய்கள்எல்லாம் துலைந்துபோமே. (௨௱௰௫)

போமேதான்உலகந்தனில் பிணியும்அண்டா
பொன்னிளையும்கருஅதுதான் புனிதகற்பம்
வேமேதான்கமனரசக் குளிகைசெய்யும்
வேணபடிவாசிஅது யிலையில்நிற்கும்
தேமேதான்தேகம்அது இறுகிப்போகும்
சிவந்தமேகாறுபடா நரைதிரைகள்மாறும்
கோமேதான்மதியினிட அண்டம்வாங்கிக்
குழையவைக்கப்பூரம்அது கூடச்சேரே. (உ௱௰௬)

சேரடாமாதாந்த நீரும்சேரு
சிவந்தான்நித்தியகள் அதில்ஏழும்சேரு
ஆரடாஅறிவார்கள் மும்மூர்த்திஆன
அதிதம்என்றபொருள்அதனை அழைக்கப்பாரு
ஏரடாபூரணத்தைக் கூடச்சேரு
என்மகனேஏரண்டத் தயிலத்தாட்டிக்
காரடாசத்தியைத்தான் பூசைபண்ணிக்
கருவானதொழிகள்எல்லாம் தொட்டுஆட்டே. (உ௱௰௭)

## மூப்புசேர்மானம்.

ஆடுவாய்கரிசனத்தின் கருஇதாகும்
அப்பனேமறைப்பினிடக் கருஇதாகும்
தேடுவாய்வசீகரத்தின் கருஇதாகும்
ஜெகஜ்ஜாலம்ஆடுகிற கருஇதாகும்
கூடுவாய்அஷ்டகர்மக் கருஇதாகும்
குவலயத்தில்பசாசுமுதல் வசியம்ஆகும்
நாடுவாய்எத்தொழிலும் இக்கருவைவிட்டால்
நன்மைஇல்லைபலியாது கருவுநன்றே. (உ௱௰௮)

நன்றென்றமூப்பதுதான் முடிக்கும்மார்க்கம்
நான்வெளியாய்ப்புலம்பிவைத்தேன் மனிதர்க்காகச்
சென்றென்றபேரண்டம் கொண்டுவந்து
சிறிசாகஇதைநறுக்கி எடுத்துக்கொண்டு
மன்றென்றஊசிநீர் எனும்நீர்தன்னில்
மக்களேஅண்டம்என்ற பூநீர்போட்டு
குன்றென்றபூமியிடப் பூநீர்தானும்
கொண்டுவந்துஅதில்கலக்கித் தெளிவைவாங்கே. (உ௱௰௯)

வாங்கியேஅண்டத்தை அதிலேபோட்டு
மக்களேகொதிக்கவைத் தெடுத்துக்கொண்டு
தூங்கியேதிரியாதே ஊசிநீரில்
துப்பறவேகழுவிஅதைக் காயப்போட்டு

பாங்கியேஅண்டம்அதை எடுத்துவைத்துப்
பாங்காகஅண்டம்என்ற பூநீர்த்தேடி
ஏங்கியேகொண்டுவந்து அப்பூநீரில்
எட்டில்ஒருபாண்டத்தில் கலக்கிவையே. (௨௨௰)

வைத்திடுவாய்மூன்றுநாள் சென்றபின்பு
மக்களே தான்தெளிவில் தெளிவைவாங்கி
நைத்திடுவாய்அடுப்பேற்றித் தீயைமூட்டி
நன்றாகக்குழம்புபோல் பருவம்பார்த்து
மெய்த்திடுவாய்பீங்கானில் இருத்திக்கொண்டு
மேன்மைஉள்ளரவிதனிலே வைத்துப்பாரு
பொய்த்திடாதுப்பாக உறைந்திருக்கும்
புண்ணியனேஇப்படியே பத்துமுறைசெய்யே. (௨௨௧)

செய்தஉப்பைஎடுத்துமே பதனம்பண்ணு
செவ்வைஉள்ளசிறுபசளை நீருவாங்கிக்
கொய்தமுடன்பூமியிட பூநீர்தன்னைக்
கொண்டுவந்துஅதில்கலக்கித் தெளியவைத்து
வைதமுடன்தெளிவைஅங்கே காயவைத்து
மக்களேஉப்பெடுத்து மூன்றும்ஒன்றாய்
நெய்தமுடன்சரியிடையாய் எடுத்துக்கொண்டு
நேர்மைஉள்ளகலவத்தில் இட்டிடாயே. (௨௨௨)

இட்டுமேபசளையிட நீரைவார்த்து
என்மகனேவழுவழுப்பு காணும்மட்டும்
தொட்டுமேஅரைத்துநன்றாய் வழித்துருட்டி
துவள்அறவேகாய்ந்தபதம் தன்னில்தானும்
பொட்டுமேகெஜப்புடத்தில் நீறிப்போகும்
புண்ணியனேஅதைஎடுத்து கலவத்திட்டு
நட்டுமேசினமோடு சாரம்சேரு
நன்மையுடன்வெடியுப்பு இடைக்கிடைசேர்ப்பாயே. (௨௨௩)

சேரேநீசிறுபசளைச் சாறுவிட்டு
செவ்வையாய்த்தான் அரைத்துவட்டுபண்ணி
பாரேநீரவிதனிலே காயவைத்துப்
பண்பானஓட்டில்வைத்து ஓடுமூடி
நேரேநீசீலைமண் ணும் நன்றாய்ச்செய்து
நேமசிழ்டைமறவாமல் புடத்தில்போடு
கூறேநீஅதைஎடுத்து வைத்துக்கொண்டு
குணமானவீரமுடன் பூரம்சேரே. (௨௨௪)

சேரப்பாவில்லேகண்ட இடைக்குத்தானும்
ஜெயமானரவிபீஜம் நாலில்மூன்று
கூரப்பாகுடத்துநீர் விட்டேஆட்டிக்
கூர்மையுடன்அரைத்துருட்டி வட்டுபண்ணி
நேரப்பாபுடம்அதிலே வைத்துப்போடு
நிஜம்உள்ளமாதாவை வணங்கிநில்லு
ஆரப்பா அறிவார்கள் மூப்பூதன்னை
அருமைஉள்ளசித்தனவன் அறிவான்பாரே. (௨௨௫)

இரவிமெழுகு.

அறிவானமுப்பூவைப் பதனம்பண்ணி
அப்பனேஆண்டொன்றின் அண்டம்வாங்கிக்
குறியானஅண்டத்தின் இடையேபூரம்
கூட்டிவைக்கரவிதனிலே மெழுகும்ஆகும்
சரியானநவநாள்தான் வைத்தெடுப்பாய்
தங்கம்என்றசிமிழாதல் தந்தமாதல்
மறியான்சிமிழ்தனிலே அடக்கம்பண்ணி
மைந்தனேதேவிமுன்பு வைத்துப்போற்றே. (௨௨௬)

போற்றுவாய்குருபூசை மண்டலந்தான்அப்பா
பூண்டுசென்றபோதல்லோ குருவதாச்சு
மாற்றுவாய்முப்புவைநீ பதனம்பண்ணு
மக்களேமெழுகுவெகு பதனம்சொன்னேன்
காற்றுமேல்சித்தந்தபுத்தி யாகநின்றால்
காணமல்மறைப்புமையைப் போட்டுக்கொண்டு
சேர்த்துமேசித்தர்வந்து சோரஞ்செய்து
திரவியம்போல்இக்குருவைத் திருடுவாரே. (௨௨௭)

திருடுவார்உனக்கும் உபகாரம்செய்வார்
செம்மையுடன்கேட்டதெல்லாம் ஈவார்பாரு
வருகுவார்உனக்குநல்ல வாக்களிப்பார்
மக்களேகற்பம்உண்ண வழியும்சொல்வார்
பருகுவார்நல்லபிள்ளை யாகக்கூடப்
பதிலாகஅழைத்துப்போய்ப் பதியில்வைப்பார்
கிருதுவார்அவர்கள்பதம் போற்றிசெய்து
கேட்டதெல்லாம்தான்கொடுத்து தொண்டுபண்ணே. (௨௨௮)

மதிமெழுகு.

தொண்டுபண்ணு அவர்கள்மனம் நோகொண்ணாது
சுந்திரனேஎன்னுடைய மகனேஐயா
வண்டுபோல்மறுஜென்மம் ஆவதற்கு
வகைகேளாய்ப்பச்சைகற் பூரம்ஒன்று

கொண்டுபோம்கோரோஜனை குங்குமப்பூ
கோதைகொள்ளும்ஜாதிக்காய் ஜாதிபத்ரி
விண்டுபோம்கிராம்புடனே ஏலம்கூட்டி
விதமானமாலிலிங்கம் உரமும்கூட்டே. (௨௨௯)

கூட்டியேகஸ்தூரி மஞ்சள்காரம்
கோதையடாகன்னிலொன்று அஞ்சாம்திங்கள்
நாட்டியேகன்னிவிடச் சுரோணிதமாம்உப்பு
நலமானகொடிநஞ்சு மாவும்சேர்த்து
வாட்டியேஅண்டொன்றில் மாண்டஅண்டம்
மக்களே அண்டமென்ற பூநீர்தானும்
மாட்டியேஅமரியுப்பு பூரிநாதம்
மைந்தனே ஒரிடையாய் எடுத்துக்கொள்ளே. (௨௩௰)

கொள்ளடாஅயப்பொடியும் காந்தம்லிங்கம்
கோதையிடாநாதம்அதில் கெந்திசேரு
விள்ளடாஅரிதாரம் விராம்பூரம்
விதமானமனோசிலையும் வெடியுப்புசாரம்
தள்ளடாசினமொசு சாக்கெல்லாம்தான்
தான்அரைப்பாய்பசலைநீர் விட்டுநன்றாய்
துள்ளடாஅரைத்துருட்டி வட்டுபண்ணித்
துப்பரவாய்ஒட்டில்வைத்து மூடே. (௨௩௧)

மூடியேசீலைமண்தான் வலுவாய்ச்செய்து
முழப்புடத்திலேவைத்து முன்பாம் சரக்கில்சேரு
வாடியேதியாதே மனம்சோம்பாதே
மக்களேசிவவேம்பின் தயிலம்விட்டு
நாடியேஅரைநன்றாய் நான்குஜாமம்
நயம்பெறவேஅரைத்தபின்பு சொல்லக்கேளாய்
சூடியேசுரோணிதநீர் விட்டுஆட்டித்
துவளஅரைநால்ஜாமம் குடத்தானே. (௨௩௨)

நீரானருட்த்துநீர் விட்டுஆட்டி
நீமகனேமுப்பூவும் நூற்றுக்கொன்று
கூரானஅண்டமென்ற மெழுகில்தானும்
கொடுத்துவிடுஆயிரத்துக் கொன்றேஅப்பா
வாரானஅண்டொன்றில் மாண்டபிண்டம்
வகையாகத்தயிலம்அது செய்துக்கொண்டு
சீரானஇத்தயிலம் விட்டுஆட்டித்
தேவிஎன்றமனோன்மணியைப் பூசைசெய்யே. (௨௩௩)

பூசையிலேலவைத்தெடுத்து குருவைப்போற்றி
புண்ணியனேஅகதேசி பரதேசிக்கன்னம்
பேசையிலேதான்கொடுத்து சிவனைப்போற்றிப்
பெருமைஉள்ள மெழுகுதனில்குன்றிஉண்ணு
ஆசையிலேவிழகாதே மண்டலம்தான்
அப்பனேஅழியாது ஆயசென்றும்
வேசையிலேஆசைகொண்ட பசல்களுக்கு
விள்ளாதேதோஷம்வரும் வேதம்பாரே. (உ௩௪)

பாரடாஇரண்டாண்டின் அண்டம்என்றால்
பழுதில்லைமூன்றும் ஒருஅஞ்சுக்குள்ளே
சேரடாகற்பம்அது ஆகும்பாரு
திடம்இல்லைப்பதினறு ஆண்டுமட்டும்
கூரடாஇவ்விதமாய்ச் செய்துஉண்ணக்
குறையாதஆண்டுகள்தான் குறைந்துபோகும்
மாரடாமற்றஅண்டம் மைப்போக்காகும்
மாரணமாம்கற்பத்திற் காகாதன்றே. (உ௩௫)

ஆகாதுசந்திரனும் சூரியனும்ஆகும்
அப்பனேசந்திரன்தான் ஐஞ்ஞூறுண்டு
போகாதுசூரியனே ஆயிரம்தான்உண்டு
போகமுனிப்பிள்ளைகளும் உண்டகற்பம்
வேகாதுமற்றும்உள்ள ரிஷிகள்சித்தர்
விரும்பியதோர்கற்பம்இது சத்தியமாய்ச்சொன்னேன்
யோகாதிசெய்பவர்கட் கிந்தகற்பம்
உத்தமனேகிட்டும்மற்றோர்க் கில்லைத்தானே. (உ௩௬)

இல்லையடாபரிபாஷை. இதுபோல்சொல்லும்
என்மகனேஇந்நூற்கள் இல்லாவிட்டால்
சள்ளையடாசாஸ்திரங்கள் பார்த்துப்பார்த்துத்
தயங்குவதேஅல்லாது சரிவராது
கொள்ளையடாஇந்தநூல் கிடைத்தபேர்க்குக்
குறிதெரியும்நெறிதெரியும் கூர்மைதோன்றும்
பிள்ளைகளேஉங்கள்புத்தி மயங்கிடாதீர்
பெருநூலைப்பார்த்தலைந்தால் பிசகுதானே. (உ௩௭)

சித்துமகிமை.

பிசகாதுநந்திநான் முந்நூறாகப்
பேசிவிட்டேன்வெளிதோன்றப் பேசாததெல்லாம்
தசகாதுதயிர்கடைந்து நெய்எடுத்தத்
தன்மையைப்போல் காணும்டாகருக்கள்எல்லாம்

பிரகாசமனக்குரங்கின் சொட்பில்சிக்கிப்
பிரபஞ்சம்மெய்யெனத்தான் பிரமிக்காது
வசமாகரன்சொன்ன படியேசெய்து
மக்களேகற்பம்உண்டு சித்தில்சேரோ. (௨௩௮)

சேராதநந்திபிள்ளை என்றுசொன்னால்
ஜெயம்பெற்றசித்தர்களும் உபசரிப்பார்
வாரடா அருமருந்தி வார்த்தையாடி
மக்களேஏறுகிற மார்க்கம்சொல்லி
கூடாதவழிதுறையும் நன்றாய்ச்சொல்லிக்
கூடவேசேர்ந்தறவு கொண்டுபின்னும்
ஏறாததுறைஅறிந்து ஏறும்போது
என்மகனேநாம்உனக்கு இதைச்சொல்வோமே. (௨௩௯)

சொல்லுவோம்சித்தரிட மகிமைஎல்லாம்
சூட்டிவைப்போம்சிவகிருபை தோன்றிப்போகும்
வெல்லுவோம்சித்தர்களும் அழைத்துக்கொள்வார்
வெகுகோடிகாலமட்டும் இருந்துவாழ்வார்
கல்லுவோம்உன்தேகம் அழிவதில்லைக்
காணலாம்அதிசயங்கள் தோன்றுமட்டும்
மல்லுவோம்என்பிள்ளை ஆனைமக்காள்
மகத்தானசித்தரிட மகிமைதானே. (௨௪௰)

மகிமைகொண்டசித்தரிலே சேர்ந்துக்கொண்டு
வாழலாம்கோடியுகம் வாழ்ந்திருந்து
நமைகொண்டபரத்தினிடக் கிருபைகூர்ந்து
கருவாயல்மலைதோறும் வாசமாகி
சகிமைகொண்டசாம்பவியாள் வார்த்தைசொல்லத்
தான்கேட்டுத்தேவரிஷி தானும்ஆகி
முகிமைகொண்டதேவசபை வாசமாகி
முத்திபெற்றுப்பரதேசி ஆவாய்பாரோ. (௨௪௧)

பா[illegible]றசொல்லும் அப்போதாச்சு
பார்மகனேகயிலாசந் திரேகம்ஆச்சு
பரதேசிஆனபதி நிலைத்தப்போச்சு
நிராமயமாய்நின்றபொருள் நீதான்ஆச்சு
குருதேசிகூற்றன்என்ற மாயைபோச்சுக்
சட்டில்லாபாடும்ஐந்தும் குணமாய்ப்போச்சு
இரதேசிஆச்சு இகபரம்தான்ஆச்சு
இருந்துவிளையாடுகின்ற சித்தன்ஆச்சே. (௨௪௨)

சித்தனென்றபேர்வரவே வெகுநாள்செல்லும்
தேடம்இருந்துகற்பம்இது தெளிந்துபாரு
முத்தனென்றகாயாதி கற்பம்கொள்ள
முடியாமல்வெகுபேர்கள் இறந்துபோனார்
கத்தனென்றகிரிகைவேண்டும் கருத்தும்வேண்டும்
கருணைவஅங்கேகாணுவதற்குக் கருணைவேண்டும்
புத்தனென்றமாய்கைதனில் சிக்கினோர்கள்
புழுப்பானைஈப்போலாம் புவியில்தானே. (உ௪௩)

புவிதனிலேஉள்ளவர்கள் கோடிக்கொன்று
புண்ணியமேசெய்தவர்க்குக் கருவேதோன்றும்
தவிதனிலேமகிமைபெற்ற சித்தர்பாதம்
தான்கண்டுதொழுதுமிக வணக்கம்செய்து
கவிதனிலேஉள்ளதொரு பொருளும்சொல்லிக்
கைபாகம்செய்பாகம் கருத்தும்சொல்லிப்
பவிதனிலேபிரபஞ்ச மாயைநீங்கப்
பரத்திலிடங்கைசொல்லிப் பாவிப்பாரே. (உ௪௪)

பாவிப்பாரென்மகனே என்றுசொல்லிப்
பதஞ்சலியாள்மகிழ்ந்துபெற்ற மகனேஎன்று
தாவிப்பார்அருகிருந்தி முத்தம்இட்டுத்
தமிழ்உரைத்தகவிதனக்குப் பயனும்சொல்லி
கோவிப்பார்புத்திவர ஞானம்சொல்லிக்
குலாவிவரக்கமனத்தின் குறியும்சொல்லி
ஆவிப்பார்அநுக்கிரகப் பேரும்இட்டு
அப்போதுகாஷாயம் அருள்செய்வாரே. (உ௪௫)

காஷாயம்கொடுத்துநந்தி பிள்ளைஎன்று
கண்மணியேஎன்மகனே வாஎன்றேதான்
ஆயாசம்திருதற்குக் கனியும்ஈந்து
அழைத்துப்போய்ஐயர்பதம் பணியச்சொல்லி
வாயாறப்பேரும்இட்டு வண்மைசொல்லி
வசனித்தேசிற்சபையில் வருகச்சொல்லி
தாயானமனோன்மணியாள் முத்தம்இட்டுத்
தன்வசமாம்இனம்தனிலே தான்சேர்ப்பாரே. (உ௪௬)

தான்சேர்ந்தபோதல்லோ சித்தன்ஆச்சு
சங்கைகெட்டமாடதுவோ சித்தன்ஆவான்
வான்சேர்ந்தபோதல்லோ பிறவிஅற்று
மாய்கைஎன்றபிரபுஞ்ச வாழ்க்கைஅற்று

கோன்சேர்ந்தபோதல்லோ சித்தர்கூட்டம்
　கூடிவிளையாடுதற்குப் போதம்கொண்டு
வான்சேர்ந்தபோதல்லோ மாய்கைபோச்சு
　மக்களேசித்தன்என்று வசனிப்பாரே. (உ௪௭)

வசனிப்பார்புவிதனிலே உள்ளபேர்கள்
　வந்தடுத்தநானை வணங்கித் தெண்டன்செய்து
ருசனிப்பார் அவர்கள்உறவாகாதப்பா
　கோதையர்கள் ஆசையிலேமயங்குவோர்கள்
நிசனிப்பார்உனக்குவரு மானம்என்ன
　நீக்கியே புறம்பென்று நிலையில்நில்லு
வசனிப்பார்கோடிசித்தர் மாண்டார்என்று
　வஞ்சகங்கள்பிரபஞ்சம் சொல்லும்பாரே. (உ௪௮)

சீஷனைச்சேர்க்கும்இயல்பு.

சொல்லுவதுகேட்டிலையோ மகனேஎன்ன
　சூதுகபடானகலியுகத்தின்வாழ்க்கை
வெல்லுவதுகோடியிலே ஒருவன்உண்டு
　வேதாந்தக்கல்விகடல் மிகுந்தசித்தன்
கொல்லுவதுபாசம்விடும் கூற்றுப்பெண்டீர்
　குழந்தைசுற்றம்பொன்னாசை மண்ணின்ஆசை
தள்ளுவதுகோடியிலே ஒருவன்உண்டு
　தன்மையுள்ளபிள்ளை அறிந்தன்றழைந்துச்சேரே. (உ௪௯)

சேர்த்ததனால்உனக்குஒரு பிள்ளைஆச்சு
　திரப்படித்தம்பித்திட மகிமைசொல்லி
நேத்திரம்போல்தான்நினைத்து களைஏறுதற்கு
　நிருவிகற்பம்ஆம்பொருளை நெஞ்சில்வைத்து
சாத்திரத்தின்வினயம்எல்லாம் சரியாய்ச்சொல்லி
　சஞ்சாரசமாதியிட வழியும்சொல்லி
பாத்திரம்என்றெண்ணி அல்லோமவுனதீட்சைப்
　பதியாகும்இருதயத்தில் பதியச்சொல்லே. (உ௫௰)

பதியமனம்இல்லாட்டால் அகலத்தள்ளு
　பஞ்சமாபாவிஎன்று அடித்துப்போடு
கெதிஉனக்குஇல்லைஎன்று விதியைச்சாடு
　கேட்டதற்குஏதெனவே கிருபைசெய்து
சதிஉனக்குமதிஇல்லாப் பிள்ளைஎன்று
　தள்ளிவிட்டுநீஒதுங்கித் தானேசெல்லு
மதிஅவற்குவருமானால் அழைத்துக்கொள்ளு
　மக்களேபிரபஞ்ச மாயைபொய்யே. (உ௫௧)

பொய்யென்றுஎண்ணாமல் பூதலத்தில்
போராட்டத்துறில்உடலம் நிலைப்பதில்லை
மெய்யென்றுவாசியைத்தான் விரும்பிநின்று
மெய்ஞ்ஞானபோதம்உற்று கற்பங்கொள்ளு
சையென்றுசாம்பவியாள் கிருபைதன்னைச்
சாராமல்உடலம்அது தளர்ந்துப்போனால்
வையென்றுமறுபிறப்பில் சித்தில்சேர்ந்து
வாழ்வதுதான்பொய்என்று அரன்சொன்னாரே. (உருஉ)

வேறு.

அரன்சொன்னசொல்லை அன்பாகவன்னிப்
பரம்சேர்ந்தசித்தர் பலவிதம்சொன்னார்
சரம்சேர்ந்தஇக்கரு சத்தியமாய்ச்சொன்னேன்
உரம்சேர்ந்தகருவென் றொளித்தார்கள்சித்தர். (உருங)

ஒளித்தகருவை ஒளியாமல்நானே
அளித்தபொருளை அறிவுறச்சொன்னேன்
பளித்தரிஷிகள் பாடியநூல்கள்
களித்தமறைப்பைக் கண்டிடுவாயே. (உருச)

கண்டிடச்சொன்ன கருமறைப்பெல்லாம்
விண்டிடயாவும் வெளிதோன்றச்சொன்னேன்
பண்டிடமுனிவர் பலவிதம்ஆகக்
கொண்டிடச்சொன்ன குறிஅறிவாயே. (உருரு)

நூலுக்குச்சாபம்.

குறியும்அறியக் குணக்கற்றநூலை
நெறிதவறுமல்நேசம் அதாகவே
தெரியத்தனியே ஜெகத்தில்ஒருவர்
அறியக்கூடாதேஅரன் சொன்னசாபமே. (உருசு)

சாபமேபெரிது சத்தியம்சொன்னேன்
கோபமேசெய்வார் கொடிமுடிவேகும்
பாபமேவந்துபழி கொலைசுற்றம்
நாமமும்அற்று நரகில்விழுவாரே. (உருஎ)

விழுவாரோநோயில் விலக்கவெண்ணாது
அழுவாரோஅவரொடு சுற்றமும்அழிந்திடும்
பழுதறப்பொருளைப் பதிவாய்அடக்கிவை
மழுவறச்சத்தியம் ஆகநினைத்திடே. (உருஅ)

நினைத்திட்டபேர்க்கு நிருவாணிகிருபை
அழைத்திட்டழைத்து அழிகில்இருத்தியே

பழுத்திட்டகருவைப் பதியவேநெஞ்சில்
இழைத்திட்டபூரணி இயம்புவாள்பாரே. (உ௫௯)

பாரேமுனிவர் பழரிஷிசித்தர்கள்
நேரோடுரைத்ததிலும் உள்ளசாஸ்திரம்
மாறேமறைத்த மறைபொருள்எல்லாம்
கூறேஅறியக் கூறும்முந்நூறே. (உ௬௰)

முந்நூறுபோல மொழிபார்கள்எவரும்
கன்னூறுபோலக் காட்டினார்போதிகைப்
பன்னூறுபோலப் பரிபாஷைபேசும்
என்னூலைப்போல இசையாதுநூல்களே. (உ௬௧)

நூலைவெளியில் விட்டவர்சுற்றம்
பாழேபோம்என்று பதிவாய்முனிவர்கள்
காலையில்எழும் கந்தனைஅன்ற
வாலைச்சிறுபெண் வசனித்தசாபமே. (உ௬௨)

சாபமேபெரிதென் றெண்ணிஇருந்தவர்
நாமமும்கிளையும் நன்றாகவாழ்ந்திடும்
நேமமும்அக நிஷ்டையில்வாழ்ந்திடும்
சோமனைப்போலும் சுகமாய்இருப்பரே. (உ௬௩)

இருப்பரோபுவியில் என்றைக்கும்வாழ்ந்து
அறுப்பரோமாய்கையை அவர்கிளைசுற்றமே
தரிப்பரோபொருளைத் தான்வெளிவிட்டவர்
மரிப்பரோபெரிதும் நரகில்வாழ்வரோ. (உ௬௪)

வாழுமேபொருளை மனதில்வைத்தோர்கள்
தாழுமோகிளைதான் தழைக்குசத்தியம்
ஆழுமேபுவியில் அடங்காதஞானத்தில்
கேளுநீசொன்னேன் கிளைசுற்றம்பெருகுமே. (உ௬௫)

பெருகிஇருந்திடும் பெண்பிள்ளைசுற்றமும்
மருவிவளர்ந்திடும் மாறாதசெல்வமும்
பருகியஅரனும் பார்ப்பதிகிருபையும்
தருகியேபெருகித் தான்வாழும்சுற்றமே. (உ௬௬)

சுற்றமும்மற்றும் சுகமாகவாழ்ந்திடும்
நித்தமும்ஞானம் நிலைத்திடும்சத்தியம்
முத்தரும்காணரும் முத்தியாம்பதியில்
பத்தியாய்நின்று பரிந்துவாழ்வாரே. (உ௬௭)

வேறு.

வாழாமல்பொருள்அதனை வெளிவிட்டோர்கள்
வையகத்தில்பிராசிக்கக் கருமநோயில்

தாளாமல்பிறவிநோயும் இவ்வண்ணம்தான்
சண்டாளப்பிணியாலே தானேமாய்வார்
கேளாமல்அரன்உமையும் சாபம்இட்டார்
கெதிஇல்லைப்பாழ்நரகே வீழ்வார்மைந்தா
கோளானகுடும்பம்எல்லாம் அழிந்துபோகும்
கும்பமுனிகூறிவைத்த சாபம்தானே. (உசஅ)

சாபம்இட்டார்தவமுனி சித்தர்எல்லாம்
சண்டாளாஇந்நூலைத் தான்காட்டாதே
கோபம்இட்டசித்தர்கள் சாபம்பொல்லாது
கொடிமுடியும்வெந்துவிழும் சாம்பலாக
பாபம்இட்டஜென்மம்என்றால் பழிகட்கஞ்சான்
பயப்பட்டால்பாபம்வந்து சூழ்ந்திடாது
சோபம்இட்டவஞ்சகர்க்கு நூல்கொடாதே
தூரமாய்ப்போய்விடுவாய் சூஸ்திரமாயே. (உசக)

சூஸ்திரத்தில்சொல்லிவைத்தப் பொருள்கள் எல்லாம்
சூதுவினயங்கள்வைத்துப் பார்க்கவேண்டும்
சாஸ்திரத்தில்முனிவர்சித்தர் சொன்னதெல்லாம்
தப்பிதங்கள்ஒன்றும்இல்லைக் கருத்தோன்றாது
நேத்திஉள்ளகற்பத்தின் கருஈதாகும்
நினைவுகொண்டுபார்ப்பவனே சித்தன்ஆவன்
ஆத்திரமாய்ச்செய்வோர்க்கும் அறிவோர்க்கும்தான்
அப்பனேகருவேறு அறிந்துபாரோ. (உஎ0)

அறிந்துபார்வயித்தியத்தின் கருவேறாகும்
அந்தந்தத்தொழில்செய்யும் கருஅறிந்தால்
தெரிந்துபோம்தொழில்களிடச் சூட்சம்எல்லாம்
தேவரிஷிநீஆவாய் சித்தன்ஆவாய்
சரிந்துபோம்நீசெய்யும் தொழிலைக்கண்டு
சந்யாசிதவமுனிவன் சித்தன்என்று
நெரிந்துபோம்உலகம்அது துதிக்கும்பாரு
நினைவாகக்கருஅறிந்து செய்துபாரோ. (உஎக)

பாரப்பாகண்டறியா மூடர்க்கேது
பார்த்தறிந்துவினயம்வைத்துப் பார்க்கவேண்டும்
நேரப்பாஆசானே சொல்லவேண்டும்
நினைவுகெட்டதோஷிகட்கோ நிஜமாம்இந்நூல்
தேரப்பாமுந்நூற்றைப் போல்தான்ஒன்று
செப்பாதுசெப்பாது தெளிந்துபாரு

ஆராய்பார அறிவார்கள் இந்தநூலில்
அடக்கம்வைத்துச்சொல்ல இல்லைஅறிந்துபாரே. (௨௭௨)

அறிந்துபார்இந்தமூந்நூ றடக்கம்இல்லை
அப்பனேவெளிதோன்றச் சொல்லிவைத்தேன்
தெரிந்துபார்முன்னோர்கள் சொல்லியநூலெல்லாம்
செய்பாகம்கைபாகம் கன்றாய்ஆய்ந்து
சரிந்துபார்கருவொன்று நாமம்கோடி
தான்சொல்லிவைத்ததனால் வெளிதோன்றாது
குறித்துப்பார்என்நூலில் மறைப்போஇல்லை
குறைக்கின்றபசல்களுக்கும் குறிதோணும்மே. (௨௭௩)

தோணுமேஎன்நூலைப் பூசைபண்ணித்
தொண்டுபண்ணிவைத்திருந்தோன் அவனேசித்தன்
காணுமேசித்தர்வந்து கருவும்சொல்லிக்
காட்டுவார்நீயும் ஒருசித்தன்ஆவாய்
பேறுமேகருஅறிந்த பெரியோர்பாடல்
பேசினதுபோல்செய்தால் பயம்ஒன்றில்லை
கோளுமோஒருபோதும் குறைவதில்லை
குறிதோன்றாக்குற்றம்அதலால் நூல்கள்பொய்யே. (௨௭௪)

பொய்யென்றுஉலகம்அதில் உள்ளபேர்கள்
புத்திகெட்டுமதிமயங்கிப் போனார்கோடி
மைஎன்றுபலர்சிரிக்க மடிந்தார்கோடி
தட்டழிந்துகெட்டோமென்று தவித்தார்கோடி
மெய்யென்றுதான்நினைந்து பிரமநிலைகண்டு
வேதாந்தப்பரம்குரு கதிஎன்றெண்ணி
நொய்யென்றறிவன்செயலை அறிந்தபேர்க்குத்
தோன்றுமடாதொட்டதெல்லாம் பலிதம்ஆமே. (௨௭௫)

கருவிபற்பம்.

பலிதமடாஇதனில்ஒரு கருவைக்கேளு
பதறுமல்சித்தர்எல்லாம் மறைத்துப்போட்டார்
தெளிதமடாகருவுக்குக் கோடிநாமம்
தீர்க்கநிலைஇல்லாத பொருளோகோடி
கலிதமடாமண்ஒன்று கலங்கள்கோடி
காணுகின்றநூல்ஒன்று கலைகள்கோடி
வலிதமடாதங்கம்ஒன்று பணியோகோடி
வசலித்தகதைஅதுபோல் வகைசதாமே. (௨௭௬)

வகையானசித்தர்எல்லாம் மறைத்ததொருபொருளை
மனதிரங்கும்சித்தர்கள்மேல் இரக்கம்கொண்டு

நகையான கருவெளியாய்த் தோன்றச்சொன்னேன்
சொன்ன நிருல்சிவன்முதலாய்க் கோபங்கொண்டார்
நகையானசித்தர்களும் சண்டைபோட்டு
நான்அவர்மேல்கோபித்தேன் செந்திப்பற்றப்
பகையானசமையத்தில் சிவனும்வந்து
பால்கொடுத்தமுதத்தைஇட்டு நந்திவாஎன்றாரே. (௨௭௭)

நந்திவாஎன்றழைத்து முன்னேவைத்து
நாதாந்தஅமிர்தம்என்க்களித்தார்ஐயா
தந்திரமாய்அவரிருக்கும் இடத்தைப்பார்த்துச்
சதாகோடிதவமுனிவர் அவரைப்போற்றி
மந்திரமாய்த்தான்நினைந்து சிவனைக்கொண்டாடி
மாமுனிவர்ரிஷிகள்சித்தர் மகிழ்ச்சிகொண்டு
சிந்தைதனில்நந்திபெற்ற பேறேபேறு
சிக்காதுதவமகிமை தான்என்றாரே. (௨௭௮)

தவமகிமைநந்தியைப்போல் இல்லைஎன்றார்
தாங்காதபதஞ்சலியைத் தாங்கப்போமோ
தவமகிமைசிவனுக்கு நந்திபார்வை
நந்திஎன்றரிஷபம்அது சிவத்தின்பார்வை
குலமகிமைஉள்ளவர்க்கு இடதுகண்ணாய்க்
கொள்கின்றார்அதினாலே சித்தர்பகைஆச்சு
பலமகிமைநந்திஎன்று சிவன்வாக்கும்பெற்றுப்
பாயாமல்பூமிதனில் படுத்தேன்பாரே. (௨௭௯)

படுத்தனடாசிவனுக்கு முன்னேபூசை
பார்மகனேஎனக்குத்தான் பின்பூசைஆகும்
கொடுத்துவிடச்சிவன்சொன்ன வாக்குப்பெற்றுக்
கோடியுகம்பூமிதனில் வாழ்ந்தேன்பாரு
அடுத்ததொருமானிடருக்குப் பிணிநோய்தீர
அப்பனேஅறைகின்றேன் உபாயம்கேளு
தடுத்ததொருகெந்தகத்தின் பற்பம்சொல்வேன்
சகலநோய்க்குடிபோகும் தன்மைபாரே. (௨௮௦)

கெந்தகபற்பம்.

தன்மைஎன்றகெந்தகத்தின் கட்டிவாங்கிச்
சற்குருவைத்தான்நினைந்து மூப்பூப்பூசிச்
செம்மையுடன்ஆற்றுவல்லிக் கிழங்கைாத்துத்
திடமாகக்கவசம்இட்டுச் சீலைசெய்து
வண்மைஎன்றஜாண்புடமே வைத்தாயானால்
மங்களமே வெண்மைஅது என்னசொல்வேன்

பொய்மையென்றமுனிவரெல்லாம் ஓடிப்போரும்
பேதம்இல்லைசத்தியமாய்ச் சொன்னேன்பாரே. (உஅக)

சொன்னதொருசாரக்கெல்லாம் இப்படியேசெய்வாய்
சொன்னமென்றபொருள்கூடும் அறையோகோடி
அன்னமென்றவன்னெனக்குச் சொன்னவித்தை
அப்பனேஒருவருக்கும் விள்ளவேண்டாம்
திண்ணமென்றதொழில்செய்து மகனேநீயும்
ஆய்தபசுமிறைவேறச் சொன்னேன்பாரும்
கண்ணலென்றலிங்கமுடன் செவுரிவீரம்
கட்டானபூரமுடன் தாரம்ஆமே. (உஅஉ)

தாரம்அடாமனோசிலையும் சிங்கிநாகம்
தன்மையென்றகாரியம் பாஷாணமெல்லாம்
ஆரம்அடாசாரக்கெல்லாம் கட்டிநீறும்
அப்பனேசெந்தூரம் மெழுகும்ஆகும்
வீரம்அடாகுறையாது சூரியனும்பூப்பூ
வீரவிபோகொண்டுவிடக் காயசித்தி
பாரம்அடாசெந்தூரம் மெழுகின்மார்க்கம்
பாடிவைத்தேன்நூல்தனிலே பணிந்துபாரே. (உஅங)

பணிந்துபார்இந்தமுந் நூறுதன்னைப்
படாமல்குகைதனிலே பதனம்பண்ணி
பணிந்துபார்சித்தரெல்லாம் மறைத்துப்போட்டார்
அப்போதல்லோஅவர்களுடன் வாதுபேசித்
தணிந்துபார் தவம்வேண்டும் என்றபேர்க்கு
ஜடம்வேண்டும்இல்லாட்டால் தவம்கிட்டாது
கனிந்துபார்முனிவர்சித்தர் பாடியநூற்கெல்லாம்
கருஅம்இந்நூல்திறவுகோல் கண்டுபாரே. (உஅச)

கண்டுபார்இந்நூலை வெளிவிட்டோர்க்குக்
கண்கெட்டுத்தலைநெறித்துக் கனலோயிஞ்சி
மண்டுபார்அவன்குலமும் நசித்துப்போகும்
மைந்தனேஎழுபிறப்பும் நயனஒளியில்லை
பண்டுபார்முனிவர்சித்தர் சொன்னசாபம்
பருதுவாதியான்சொன்ன சாபம்பொய்யா
உண்டுபார்எழுபிறப்பும் வந்துசூழும்
உலகம்அதில்காட்டாதே அடக்கம்பண்ணே. (உஅரு)

அடக்கம்அடாமனதடக்கம் வெகுவாய்வேண்டும்
அப்பனேயன்னுயிர்தன் னுயிர்போல்செய்து

ஒடுக்கம்அது தனில்இருந்து கருணைநேர்தடி-
ஒருவருந்தம்தெரியாமல் தொழில்செய்து
தடக்கமடன்தீ இருந்து கற்பம்உண்ணு
தாள்ளண்ணைத்தேகம்அது தங்கம்போராம்
விடக்கெடுந்தகாயில்இருந் தாவதென்ன
மேநிலியில்வள்ளாவரும் சித்தர்ஆமே. (உஅசு)

சித்தரைப்இருப்பவர்கள் கோடிக்கொன்று
தெளிவுகண்டுஅறிவுகொண்டு தேறவேண்டும்
முத்தரைப்என்நூலில் கருணைக்கண்டு
முடிந்தம்வகைதான்அறிந்து முறைதப்பாமல்
பந்தறைப்சிவன்மேலே பாரம்போட்டுப்
பரமகுருபாதம்அதை நெஞ்சில்வைத்துக்
கர்த்தரைப்நீஇருந்து காட்டுபெற்றுக்
கண்டுகண்டுதேறுவது கடினம்தானே. (உஅஎ)

கடினம்அடாவெகுகடினம் மனதடக்கம்பண்ணு
கண்மணியேகருணையெல்லாம் வெளியாய்ச்சொன்னேன்
படினம்அடாசித்தர்சொன்ன சாஸ்திரங்கள்எல்லாம்
பலவிதமாய்ச்சொல்லிவைத்தார் கருத்தோன்றுமல்
நடினம்அடாநான்சொன்ன மூந்நூறுதன்னை
நாதாக்கள்கேட்டுமெச்ச சிவனும்மெச்ச
வடினம்அடாமூந்நூறும் வெளிவிட்டோர்க்கு
மகத்தானரிஷிகள்சொல்லும் சாபம்தானே. (உஅஅ)

சாபம்அடாஎழுபிறப்பும் நீர்க்கொண்ணுது
சண்டாளச்செனனமதாய்ப் பிறக்கும்பாரு
பாபம்அடாஅவன்குலங்கள் வறுமைஆகிப்
பழிப்பவர்க்குக்கண்குருடு சப்பாணிஆகிப்
போகம்அடாக்ஷயரோகம் குன்மம்காசம்
பொல்லாதநோய்களிலே அழுந்துவான்பார்
ஏகம்அடாஎன்குருவும் சிவனும்சொன்னார்
ஏழைமதிப்போகாதே நூல்கொடாதே. (உஅகூ)

கொடுக்காமல்வெகுபதனம் பண்ணிக்கொண்டு
குருபரனைத்தாள்நினைந்து நூலைவைத்துத்
தடுக்காமல்பூசைபண்ணி அந்திசந்தித்
தான்தொழுவாய்சிவன்பதந்தை நெஞ்சுள்வைத்துக்
கொடுக்காமல்குகைதனிலே தனித்திருந்துக்
குருவானமூந்நூற்றை அவிழ்த்துப்பார்த்து

விடுக்காமல்ஞானநிலை கண்டுதேறி
வேதாந்தக்கருவையெல்லாம் மனதிலேயே. (உகூ0)

வையடாவென்மேலே ஆணை ஆணை
மகத்தானசித்தர்கள்மேல் ஆணை ஆணை
பொய்யடாபோகாது கணபதிமேல்ஆணை
புகழ்ப்பெரியவள்ளிபங்கன் தன்மேல்ஆணை
நையடாநல்லோர்கள் பெரியோர்மேல்ஆணை
நான்சொன்னசாபமெல்லாம் பலிக்கும்பாரு
தொய்யடாஎந்தனிட மூன்றாவதன்னைத்
தொல்லுலகில்பொல்லவர்க்குச் சொல்லொண்ணுதே. (உகூக)

கருங்கிடை.

சொல்லியதோர்கருவுக்கு நாமம்கோடிச்
சொல்லிவைத்தார்சித்தர்எல்லாம் கூடிக்கூடி
வல்லியதோர்இக்கருவை மறந்தபேர்க்கு
வகைஆகமாட்டாது தொழிலும்பொய்யாம்
மெல்லியதோர்இதுதொழிற்குப் புரைமோர்ஆகும்
வேதம்நின்றுவிளங்குவதிக் கருவினாலே
தெள்ளியதோர்நூல்களுக்குத் திறவுகோல்ஆம்
சித்தர்சொன்னமறைப்பெல்லாம் தெளிந்துபோமே. (உகூஉ)

தெளிந்துபோம்சிற்றண்டம் விந்துஆகும்
தெளிவானபிரிதிவு நாதம்ஆகும்
ஒழிந்துபோம்இரண்டினால் உலகவாழ்க்கை
உத்தமனேஇரண்டும்ஒன்றாய்ச் சேர்ந்தபோது
வழிந்துபோம்உருஆச்சு மண்பொன்ஆச்சு
மக்களேகற்பம்உண்ண வலுவும்ஆச்சு
அழிந்துபோம்இக்கருவை விட்டபேர்க்கு
ஆகாதுஜடலம்நிலை யாதுபாரே. (உகூ௩)

நிலையாதுபிண்டம்அதை மறந்தபேர்க்கு
நிகழ்ந்ததொருகங்கைஎன்ற கன்னிநீர்ஆம்
துலையாதுஅன்னமயம் பூநீர்ஆகும்
துலங்கும்அடாபேரண்டம் வெள்ளைக்கல்லு
மலையாதேஅமரிஎன்ற சிவனும்போகும்
மாந்திரியக்கருஅல்லோ கொடிநஞ்சும்மாவும்
கலையாதேஇக்கருவைச் சாஸ்திரங்கள்தோறும்
காட்டினார்கருஎன்று கோடிநாமந்தானே. (உகூச)

நாமம்தான்வெகுகோடி நாமம்ஆகும்
  நாதாக்கள்பலவிதமாய்ச் சொன்னார்கள்
சேயம்தானுலகத்தில் சொன்னவார்த்தை
  செயமின்தான்பெருமீறுக் கிசையாமென்று
வாமம்தான்மறுச்சொல்லக் கேட்டிடவே
  மக்களேபிரபஞ்ச மாயைபொய்யடாம்
சோமன்தான்ஞானவெள்ளம் நிஜம்என்றெண்ணித்
  துணிந்தவர்க்குஞானகிலே கைவசமாய்ப்போம். (உசுரு)

கைவசமாம்உலகில்உள்ள பூடோவெறுப்பக்
  கட்டும்அடா இந்தஉடல் கட்டாதப்பா
மெய்வசமாம்வாதம்உண்டு வயித்தியம்உண்டு
  வேணஅஷ்டகர்மம்முதல் எல்லாம்உண்டு
கைவசமாய்உடல்கட்ட மாட்டாதப்பா
  கட்டும்இக்கருவெளியாய்த் தோன்றுதப்பா
பொய்வசமாய்ச்சொல்லிவைத்தார் சித்தர்எல்லாம்
  பூவினிடஉப்பெடுத்து ஆடுவாரோ. (உசுசு)

பூஎன்றால்மற்றதெல்லாம் பூஆமோசொல்
  புத்திகெட்டமாடேநீ பூநீர்கேளு
வேஎன்றால்சிவந்தகன்னி மாதம்சென்று
  வெளியானநீர்அல்லோ பூநீர்ஆகும்
காமென்றால்காரம்அடா சாரம்ஆகும்
  கட்டானவீரம்அல்லோ பூரம்ஆகும்
நேமென்றால்இதைவிட்டால் காரம்இல்லை
  நின்றதொருமாதுநீர் நிபம்பாரோ. (உசுஎ)

மாற்றமை.

பாரடாமறைப்பினிட மார்க்கம்தன்னைப்
  பண்பாகச்சொல்லுகிறேன் சுளுவோமெத்த
நேரடாகருங்கன்னிச் சாறுவாங்கி
  நிழலிலேவைத்துலர்த்திக் காயவைத்துப்
பேரடாபேய்ப்பீர்க்கும் ஆமணக்கின்விரையும்
  பெல்மாகச்சரிஇடையாய் எடுத்துக்கொண்டு
தூரடாபிடித்துநன்றாய்த் தயிலம்வாங்கித்
  தூரநீர்தன்னைவிட்டு நன்றாய்ஆட்டே. (உசுஅ)

ஆட்டையிலேபித்தம்அது கொஞ்சம்போட்டு
  அப்பனேசந்திரன்தன் மெழுகும்போட்டுக்
காட்டையிலேகரும்பல்லி அண்டோட்டில்கருக்கிக்
  கண்மலர்பெயலாதவரை நெய்யும்சேர்த்து

மூட்டையிலேஅரைத்துநன்றாய் வழித்துவைத்து
முனையானவயிரவனைத் தியானம்பண்ணி
நாட்டையிலேபுருவம்அதில் திலதம்போடு
நாற்றுவார்எவ்வெவர்க்கும் நாதன்நீயே. (௨௯௯)

நாதன்என்றசித்தர்கள்தான் ஆடும்மையை
நான்வெளியாய்ச்சொல்லிவைத்தேன் நன்றாய்த்தானும்
ஆதன்என்றஅம்மஞ்சள் பெண்மஞ்சள்பார்த்து
அப்பனேகருத்தயிலம் இறக்கிக்கொண்டு
வேதன்என்றதிலைகைப்பூச்சி அண்டோட்டில்கருக்கி
விள்ளுநவாய்த்தயிலம்விட்டு நன்றாய்ஆட்டிச்
சூதன்என்றசில்லியிலே தடவிக்கொண்டு
சுருட்டடாதிரிஅதனை விளக்கில்போடே. (௩௱)

போட்டஉடன்அண்டோடு கவிழ்த்துமூடி
பொருந்திநின்றகாராவின் நெய்யைவிட்டு
வாட்டமுடன்கபாலத்திற் பற்றும்மையை
மைந்தனேசுரண்டி அதில் தயிலம்விட்டு
நாட்டமுடன்சந்திரன்என்ற மெழுகும்கூட
நலமானபித்தும்இட்டுப் புனுகுகூட்டித்
தேட்டமுடன்அரைத்துநன்றாய்ச் சிமிழில்வைத்துத்
தேவைஎன்றபேர்நினைத்துத் திலதம்போடே. (௩௱௧)

போட்டஉடன்உலகம்எல்லாம் வணங்கும்பாரு
பொல்லாததுஷ்டரோடு மிருகம்எல்லாம்
நாட்டமுடன்கைவசமே ஆகும்பாரு
நவிலாதேஇக்கருத்தை வெளிவிடாதே
கூட்டமிட்டுத்திருடாதே குறிசொல்லாதே
குணம்கெட்டமாய்கைதனில் அகப்படாதே
வாட்டமுடன்இந்தமைப்போல் வசிகரங்கள்
வாயாதுஉலகம்அதில் வரிசைபாரோ. (௩௱௨)

அஞ்சனமை வேறொருமுறை.

வரிசையுடன்அஞ்சனத்தைச் சொல்லக்கேளு
மைந்தனே பூமிநீர் கொண்டுவந்து
நேரிசையுடன்அரைத்துநன்றாய் வில்லைதட்டி
நீளவாகக்குழித்தயிலம் இறக்கிக்கொண்டு
பரிசையுடன்சந்திரன்என்ற மெழுகும்போடு
பண்பானபித்துடனே கஸ்தூரிபோடு

தரிசையுடன்தயிலமிட்டு ஆட்டிநன்றாய்த்
  தந்தம்என்றபிமிழ்அதனில் மூணுமையே. (௱௩)

மூணுமையும்வைத்துநீ பூசைபண்ணி
  முன்சொன்னமைஅதற்கு வயிரவன்தன்பூசை
காணும்அடாபின்சொன்ன வயியமைக்குக்
  கணபதியின்பூசைசெய்து கருத்தாய்நில்லு
தோணும்அடாஅஞ்சனதேவிபூசைச்
  சொல்லியேஆயிரம்தான் உருவும்செய்து
வேணும்என்றநேரம்அதில் தொழிலைச்செய்வாய்
  வேதமுறைதவறாமல் பலிக்கும்பாரோ. (௱௪)

பலிக்கும்அடாசாஸ்திரத்தை வெளிவிடாதே
  பாடியதோர்கருஅதனில் பொருள்சொல்லாதே
கலிக்கும்அடாதொழில்கள் சிவன்கருணையாலே
  கடினம்என்றசித்தர்களாம் முனிவராலே
சொலிக்கும்அடாஉன்நாவில் ஈஸ்பரியாள்கிருபை
  தோன்றும்அடாசற்குருவும் ஒன்றாய்த்தோன்றும்
கெலிக்கும்அடாநந்திநான் சொல்மூந்நூறு
  கெதிபெற்றசூட்சகாரணமாய்முற்றே. (௱௫)

முத்திபெறுஞானறிவு தங்கிநின்று
  மோட்சநிலைதான்அறிந்து சித்தும்பெற்றுப்
பற்றிநின்றசுடர்ஒளியைப் பதிவாய்க்கண்டு
  பழக்கத்தால்வாசிநின்றதலமும்கண்டு
சித்திபெற்றக்கருவிளிட சூட்சம்கண்டு
  தெளிந்தமதிமாயைவிட்டுச் சிவமேஎன்று
சத்திநின்றஇடம்காணப் பேறும்பெற்றுச்
  சகலஉயிர்தானும் மூந்நூறுமுற்றே. (௱௬)

நந்தீசர்கருக்கிடைஅருளிச்செய்த-௱.

முற்றிற்று.



